# முல்லைப்பாட்டு,

ஆராய்ச்சி உரை.





இது,

சென்னைக் கிறிஸ்டியன்காலேஜ்

தமிழ்ப்பண்டிதர்,

நா. வேதாசலம் பிள்ளையால்,

இயற்றப்பட்டுச்

சென்னைச் சி.என் அச்சியந்திரசாலையில்

பதிப்பிடப்பட்டது

---

1903.

# PREFACE.

———:o:———

"Poetry is simply the most beautiful, impressive, and widely effective mode of saying things, and hence its importance" is the wise dictum laid down by that most charming poet-critic Matthew Arnold. To a mind brooding over the dazzling beauties manifesting themselves in the phenomenon of nature, to an intellect plunging deep into the hidden mysteries of the universe, and to a soul soaring high with religious fervour and sublime sentiments above the horizon of human thought nothing is so beautiful, so impressive and so effective as Poetry. Nay, to a heart eaten away bit by bit by worldly cares it is the healing balm; to a heart chilled by the icy hand of cruelty, it is the melting morning sun; and to a heart stained with the blackest crime it is the washing pearly dew. Ah! the changes wrought by Poetry in the mind of man are wonderful and the effects which it produces on him are strikingly permanent. To me the study of Poetry has been a welling fountain of delight and ever will it continue to be a fruitful source of genuine pleasure. For years past, I have been applying myself closely to a careful study of the ancient classical poems of the Tamil language and drank deep the sweet nectar stored up therein. The pure simplicity of thought, the close and minute observation of nature, the vivid and sublime portraits presented of the social, moral and intellectual constitution of the Tamil life, the energy and artistic excellence beaming through with a sterling beauty, and, last

but not least, the great historic value which it possesses—all combine to invest Tamil Poetry with a loveliest charm and purest splendour that can hardly be surpassed by the poetry of any great languages of the world and thereby accord to Tamil a unique position amidst them.

But sad to relate, the classical poems prescribed as text books for the B.A. and F.A. Examinations in the University of Madras, seem to have attracted little or nothing of the attention of students and their study has been even regarded by some superficial readers as useless and wearisome. This is due partly to the teachings of Munshees and the bulky volumes of notes they publish, which mainly consist in giving word by word meanings and turgid and trivial grammatical notes that are insignificant for a critical study, and partly to the most obscene and silly Tamil prose and poetry pieces that are prescribed as text books and which by no means represent the true nature of the classical poetry of Tamil. Here, I don't mean to deny the fact that one or two classical poems are occasionally and unconsciously prescribed as text books by the scrupulous men of the Tamil board, but I intend to say that even these few brilliant gems are swallowed up in the ravenous maw of the filthy poems forthcoming side by side with them as text books. The sparkling glitter of the former is buried deep in the intense darkness of the latter. And hence everything is surrounded by an impermeable gloom. In spite of all this, I have had an earnest desire to direct the attention of students to a critical study of some of

the classical poems and see how the effect is produced on them when they were put in the light of modern scientific culture. Although I am quite unfit for the task, yet I ventured to make an attempt which I afterwards found to my greatest satisfaction, proved highly successful within the class rooms of my college and realised the pleasure I had when beginning to put the scheme into practice. While I was engaged in teaching Mullaipâttu to my students of the senior B. A. class, they requested me to write a criticism on this beautiful ode and subscribed in advance in order to defray the cost of printing. In compliance with their request I have most cheerfully undertaken the task. And in connection with the work, I seize this opportunity to express my thanks from the bottom of my heart to my students of the senior B.A. class for this and many acts of courtesy and kindness they have extended to me.

Mullaipâttu is an ancient classical ode of 103 lines sung in honor of the Pandian king Nedunchelian, by his court bard Nappûthanâr. How Nedunchelian, having gone on on expedition to meet the combined forces of seven powerful kings in the field at Talayâlangânam and routed them all in the battle that ensued, returns with great splendour and magnificence and trophies of victory to kiss his loveliest wife and how this beautiful maiden that had been left alone in a country villa with a deep sorrow at the time of his separation, is lying down on her couch her chaste bosom heaving up with a sigh of consolation, are all related most vividly in this poem. The Poem is remarkable alike for simple

beauties and noble sentiments. The imaginative hold which it has on the mind of the reader is strong and elevating. The interest of the plot is sustained throughout by the artistic method insinuated nto it by the poet with the delicacy and subtlety that characterize a master mind. The rhythm and harmony are varied and adhere themselves closely to the dignified march of the sense, while the style, though rugged, is chaste and elegant replete with Tamil elements. The Sanscrit words have intermingled in it at the rate of 2 per cent and the date of its composition falls about the 2nd century B.C

In the following pages I have taken on the main lines of criticism inculcated by the able and profound critic Prof. William Minto, for his critical methods are exceedingly interesting and help much towards a clear understanding of the work to be scrutinised. From this critical point of view, I have given a historic account of the age that gave birth to such an excellent Tamil poem as Mullaipâttu and of the influence which it exerted upon this poem. It must be remembered that the true nature of a work cannot be comprehended, unless we have a distinct idea of the age in which it had sprung up. I have also availed myself of the grand views expressed concerning the nature and functions of Poetry by such great masters as Milton and Ruskin and have even translated freely one or two passages from their works into Tamil.

In my analysis of the poem, I have stuck close to the original idea conceived and expressed by the Poet, rather than to the mangled and distorted commentary of Nachchinârkkiniar. The commentator, discarding

the simple and natural beauty with which the subject matter of the ode runs through, has torn the excellently woven fabric of the poet to pieces and glues them together with his own vapid thought in such a manner as to make the poem most artificial and highly ridiculous. And therefore in elucidating the text, I have inserted wherever necessary, short critical notes that would make the inaptitude of the commentator's meanings at once intelligible to the students. Pandit V. Sâminâtha Iyer of the Govt. college at Kumbakonam and Pandit C. Thiruchitrambalam Pillai of Coimbatore, having been greatly misled by the commentary of Nachchinârkkiniar, marred the flow and natural arrangement of the poetic thoughts in the highest degree. But of the two I recommend that Mr. Thiruchitrambalam's notes and critical introduction are much more valuable for a clear understanding of the commentary than those of Mr. Sâminatha Iyer's annotated edition. In the course of my criticism I need hardly say that I have widely differed from the commentator and the two Pandits ; but I have fully stated my reasons and authority for so doing.

I now conclude these remarks with a fervent hope that the students who take a deep interest in the study of this poem, will find in my criticism the better means of getting an appreciative true knowledge of this genuine relic of a great and ancient Tamil poet Nappûthanâr.

Madras, Christian College,
28th Sept. 1903. } Pandit. R. S. Vêdâchalam.

---

## CONTENTS.

# முல்லைப்பாட்டு,

ஆராய்ச்சி உரை.



*Poetry and its function.*

---

முல்லைப்பாட்டு என்பதைப்பற்றித் தெரியவேண்டுவன எல்லாம் ஆராயும் முன் பாட்டு என்பதென்னை? என்று அறிந்துகொள்ளல்வேண்டும். பிற்காலத்துத் தமிழ்ப்புலவர் பாட்டென்பது இன்னதென்றே அறியாமல் விநோத விநோதமாய்ச் சொற்களைக் கோத்துப் பொருள் ஆழமின்றிச் செய்யுள் இயற்றுகின்றார். முற்காலத்துத் தமிழ்ப்புலவரோ பாட்டு என்பதன் இயல்பை இனிதறிந்து நலமுடைய செய்யுட்கள் பலப்பல இயற்றினர். ஆகலின், பாட்டு என்பது இன்னதென்று ஒரு சிறிது விளக்குவாம்.

உலக இயற்கையிற் கண் முதலான புலன்களுக்கு விளங்கத்தோன்றும் அழகினை எல்லாம் தனக்குள்ளே நெருங்கப் பொதிந்துவைத்துப் பின் அவற்றை நம் அறிவினிடத்தே புலப்படும் வண்ணம் தோற்றுவித்து மாறுதல் இல்லா இனிய ஓசையுடன் ஒற்றுமைப்பட்டு நடைபெறும் இயல்பினை உடையதுதான் பாட்டென்று அறிதல்வேண்டும். இன்னும் எங்கெங்கு நம் அறிவைத் தன்வயப்படுத்துகின்ற பேரழகும் பேரொளியும் பெருங்குணமும் விளங்கித் தோன்றுகின்றனவோ அங்கெல்லாம் பாட்டுண்டு என்றே அறிதல்வேண்டும். இதனை விரித்துக்காட்டுமிடத்துப், பேரழகாற் சிறந்த ஓர் அரசி தான் மேற்போர்த்திருந்த நீலப்பட்டு ஆடையினைச் சிறிதுசிறிதாக நீக்கிப் பின்பு அதனைக் கீழே சுருட்டி எறிந்துவிட்டுத் துயில் ஒழிந்து தன் ஒளி விளங்கு நளிமுகங்காட்டி

எழுந்ததுபோல, இருட்கூட்டம் குவிந்து மழுங்கி அலைகடலிற் சென்று அடங்கும்படி இளைய ஞாயிறு உருக்கித்திரட்டிய பசும்பொற்கோளம்போல் தளதளவெனக் கீழ்த்திசையில் தோன்றவும், அத்திசையெல்லாம் பொன் உரைத்த கற்போற் பொலிந்து பிரகாசிப்பவும், பசுமை, பொன்மை, நீலம், சிவப்பு, வெண்மை முதலான நிறவேறுபாடுஉள்ள உலோகங்கள் உருகி ஓடுகின்ற நிலம்போல வான் இடமெல்லாம் பலவகைப்பட்டு விரிந்து விளங்கவும், கரியமேகங்கள் எல்லாம் செவ்வரக்குவழித்த அகன்ற திரைச்சீலைகள் எனவும் வெளிய மேகங்கள் எல்லாம் பொற்பட்டுப்படாம்போலவும் ஆங்காங்குச் சொல்லுதற்கு அரிய பெரும் பிரகாசத்துடன் திகழவும் உலகமங்கை நகைத்தாற்போலப் புதுமை உற்றுத்தோன்றும் விடியற்கால அழகெல்லாம் பாட்டென்றே அறிதல்வேண்டும். ஆ! இங்ஙனந் தோன்றும் அவ்விடியற்கால அழகைக்கண்டு வியந்தவண்ணமாய் மீன்வலையோடு கடற்கரையில் நிற்கும் செம்படவனைக்காட்டிலுஞ் சிறந்த புலவன் யார்?

அவ்விடியற்காலையிலே முல்லைநிலத்துக்கோவலர் ஆன்கன்றுகளைக் கொட்டிலிலே தாம்பினாற் கட்டிவைத்து ஆன்நிரைகளை அடுத்துள்ள மலைச்சாரலிற் கொண்டுபோய்ப் பசிய புல்மேயவிட்டுத் தாம் மரநிழலில் சாய்ந்திருந்து, தமக்கெதிரே பச்சிலைப்போர்வை மேற்கொண்டு கரியமேகங்கள் நெற்றிதழுவிக் கிடப்பப் பெருந்தன்மையோடு வான் அளாவித் தோன்றும் மலையினை அண்ணாந்துபார்த்து அவர்கள் அச்சமும் மகிழ்ச்சியும் அடையும்போது அங்கும் பாட்டுண்டென்றே அறிதல்வேண்டும். காதலினாற் கட்டுண்ட இளைஞரும் மகளிரும் நெகிழாத அன்பின் மிகுதியால் தோளோடுதோள் பிணையத் தழுவிக்கொண்டு மலையடிவாரத்திலுள்ள பூஞ்சோலைகளிற் களிப்பாய் உலவுந்தோறும் தூக்கணங்குருவிகள் மரங்களில் விசித்திரமான கூடுகட்டுதலையும், மரப்பொந்துகளில் மணிப்புறாக்கள் கூவுதலையும், ஆண் மயில்கள் அரிய கலாபத்தினை விரித்துப் பெடைமயில் கண்களிப்ப ஒருபுறம்

ஆடுதலையும், மலையருவி நீர் கூழாங்கற்படையின்மேற் சிலு சிலுவென்று ஓடிவந்து அச்சோலையின் ஒருபக்கத்துள்ள ஆழ்ந்த குட்டையில் நிரம்பித்துளும்ப அதிலுள்ள செந்தாமரை முகிழ்கள் அகன்ற இலைகளின்மேல் இதழ்களை விரித்து மிகச் சிவப்பாய் அலர்தலையும் விரும்பிக் கண்டு நறுமணங்கமழும் பூக்களை மரங்களினின்றுந் தாவிப் பறித்துக் கரிய கூந்தலில் மாறி மாறி அணிந்தும் சிவக்கப்பழுத்த கொவ்வைக்கனிபோன்ற தம் இதழ்களில் அழுந்த முத்தம்வைத்துக்கொண்டும், தேன் ஒழுகினாற்போல மதுரமான நேசமொழிகள் பேசிக் கொண்டும் அவர்கள் செல்லுமிடத்து அங்கும் பாட்டுண்டென்றே யறிதல்வேண்டும். சுருங்கச்சொல்லுங்கால் எங்கெல்லாம் நம் உணர்வை வசிகரிக்கின்ற பேரழகு உலக இயற்கையிற் காணப்படுமோ அங்கெல்லாம் பாட்டு உண்டென்பது தெளியப்படும். ஆயினும், ஒரு நல்லிசைப் புலவனால் இயற்றப்படுகின்ற பாட்டுப்போல அது நூலினிடத்தே காணப்படுவதில்லையே எனின்; அறியாது வினாயினாய், ஒரு நூலின்கண் எழுதப்பட்டு உலக இயற்கையின் அழகை நம் உள்ளத்திற் பொருத்திக்காட்டி நமக்கு உணர்வு பெருக்கும் சொல்லின் தொகுதியான பாட்டு நூலில் எழுதப்படுகின்ற வடிவுடைய தூலப் பொருளாகும்; உலக இயற்கையின் அழகோடு ஒற்றுமைப் பட்டுக் கண் முதலான புலன்வழிப் புகுந்து நமக்கு உணர்வு மிகுதியினை வருவிக்கும் பாட்டு வடிவு இல்லாத சூக்குமப் பொருளாகும். இங்ஙனமாகலின், உலக இயற்கையிலெல்லாம் பாட்டு உண்டென்பது துணிபு என்க.

அல்லாமலும், உயிர்வாழ்நாளில் ஒவ்வொரு நாளும் நம்முடைய நினைவுகளெல்லாம் உணவு தேடுதலினும், பொருள் தொகுப்பதினும், மனைவிமக்கட்கு வேண்டுவன சேகரித்துக் கொடுத்தலினும், பிறர் இட்ட ஊழியம் செய்தலினுமாகப் பலவாறு சிதறி அருமை பெருமையின்றி அவலமாய்க் கழிகின்றன. இவ்வாறு கழிந்துபோகும் மக்களுடைய நினைவுகளும் பிறவும் நமக்கு இன்பந்தராவாகலின் அவற்றை அறியவேண்

டுமென விரும்புவார் யாரும் இலர். இனி இவ்வாறு கழியும் நாட்களில் ஒரோவொரு சமயங்களில் அவர் அறிவு அவல நினைவுகளின் வேறாகப்பிரிந்து உலக இயற்கை அழகிற் பொருந்தி அதன்வண்ணமாய்த் திரிந்து தெளிவுற்று விளங்கும் போது, அவ்வறிவிற் சுரந்து பெருகும் அரிய கருத்துக்களை யே நாம் அறிவதற்கு மிக விரும்புகின்றோம். இங்ஙனந் தோன்றும் அரிய கருத்துக்களின் கோவை யொழுங்கினையே பாட்டென்றும் அறிதல்வேண்டும். இன்னும் மக்கள் வாழ்நாளென்கின்ற நீரோடையிலே அவல நினைவுகளான கலங்கல் நீர் பெருகிச் செல்லும்போது உலக இயற்கையென்னும் மலைக் குகைகளில் அரித்துவந்த அருங்கருத்துக்களான பொற்றுகள் இடையிடையே ஆழ்ந்து அவ்வோடையின் அடிநிலத்திற் சிதர்ந்து மின்னிக்கிடப்ப நல்லிசைப்புலவன் என்கின்ற அரிப்புக்காரன் மிக வருந்தி முயன்று அவற்றையெல்லாம் ஒன்றாகப்பொறுக்கி எடுத்துத் தன் மதிநுட்ப நெருப்பிலிட்டு உருக்கிப் பசும்பொற் பிண்டமாகத் திரட்டித் தருவதே பாட்டு என்றும் அறிதல்வேண்டும். இன்னும் மக்கள்மனம் என்கின்ற தித்திப்பான அரிய அமிழ்தம் பலவகையான குற்றங்களானும் கலப்புற்று அசுத்தமாய்ப் போக நல்லிசைப்புலவன் தன் பேரறிவினால் அதனைத் தெள்ளிவடித்து அதன் இன்சுவையினை மிகுதிப்படுத்தி நாமெல்லாம் பருகிப் பெரியதோர் ஆறுதல் அடையக்கொடுப்பதும் பாட்டென்றே அறிதல்வேண்டும். இக்கருத்துப் பற்றியே மில்டன் என்கின்ற ஆங்கிலமொழிவல்ல நல்லிசைப்புலவரும் * "பாட்டென்பது மக்கள்மன அறிவின் சாரமாய் இறக்கப்பட்ட பரிசுத்தமான அமிழ்தம்" என்று உரைகூறினார். இதுநிற்க,

இனி இங்ஙனம் இயற்றப்படுகின்ற பாட்டு உலக இயற்கை அழகுடன் பெரிதும் பொருந்தி நடத்தல்வேண்டும். இன்னும் இதனை நுணுகி நோக்குமிடத்துப் பாட்டுப்பாடுதலில் வல்லவனான நல்லிசைப் புலவனுக்கும், உலக இயற்கை

* Areopagitica.

யினைப் பலவகை வண்ணங்களாற் சித்திரித்துக் காட்டுகின்ற ஓவியக்காரனுக்கும் ஒற்றுமை மிக உண்டென்பது அறியலாம். ஆயினும், ஓவியக்காரன் சித்திரிக்கின்ற படம் கட்புலனுக்குமாத்திரம் தோன்றும்; நல்லிசைப்புலவன் சித்திரிக்கின்ற பாட்டுக் கண் முதலான புலன்களின் சாரமாய் விளங்கும் உள்ளத்திலே தோன்றும். ஓவியக்காரன் தான் எழுத எடுத்துக்கொண்ட பொருளைப் பன்முறையும் நுண்ணிதாக அளந்தளந்து பார்த்துப் பின் அதனைத் திறம்படச் சித்திரித்தால்மாத்திரம் அப்படத்தைக்கண்டு வியக்கின்றோம்; தான் விரித்து விளக்கமாய் எழுதவேண்டும் பாகங்களில் அவன் ஒரு சிறிது வழுவிவிட்டானாயினும் அப்படத்தின்கண் நமக்கு வியப்புத்தோன்றாது. நல்லிசைப் புலவனோ அங்ஙனம் அவனைப்போல் ஒவ்வொன்றனையும் விரிவாய் விளக்கிச் சொல்லவேண்டும் பிரயாசை உடையான் அல்லன். ஓவியக்காரன் புலன் அறிவைப்பற்றி நிற்பவன்; புலவனோ மனஅறிவைப்பற்றி நிற்பவனாவன். புலனறிவோ தூலப்பொருள்களை விரித்தறியும் இயல்பினுள்ளது; மனவறிவோ அப்புலனறிவின் சாரமாய் நின்று சூக்குமமான பொருளையும் தானே ஒரு நொடியில் விரித்தறியும் இயல்பினுள்ளது; அம்மம்ம! மனோபாவகத்தின் ஆற்றலை நாம் என்னென்று சொல்லுவேம்! அணுவை ஒரு நொடியில் மலைபோற் பருக்கச் செய்யும், மலையை மறுபொழுதில் ஓர் அணுவினுங் குறுகச் செய்யும். இங்ஙனம் விசித்திர இயல்புடைய மனோபாவகத்தினை நல்லிசைப்புலவன் என்னும் மந்திரகாரன் தன் நுட்ப அறிவென்னும் மாத்திரைக்கோலால் தொடுதல் மாத்திரையானே அது திடுக்கென்று எழுந்து அவன் விரும்பியவண்ணம் சுழன்று சுழன்று ஆடும். இன்னுஞ் சிறிது இதனை விளக்குவாம். ஓவியக்காரன் பயங்கரமான அகன்ற கரிய பெரிய ஒரு காட்டினை எழுதல்வேண்டுமாயின் பலநாளும் பலகாலும் அதன் இயற்கையினை அறிந்து பரிய மரங்கள் அடர்ந்து ஓங்கி ஒன்றோடு ஒன்று பிணைந்து வெளிச்சம்புகுதாமல் தடைசெ

ய்து நிற்றலையும், அக்காட்டின் வெளித்தோற்ற அமைப்பினையும், மரங்களின் இடையிலுள்ள சந்துவெளிகளில் நம்பார்வை நுழையுந் தன்மையினையும், உள்ளே இருள் தடிப்பாய்ப் பரவியிருத்தலையும் அக்குள்ளவாறே சிறந்த பலவண்ணங்களாற் குழைத்து மிக வருந்தி எழுதிக்காட்டல்வேண்டும். இஃது அவனுக்குப் பலநாள் வேலை; நல்லிசைப்புலவனோ 'பரிய மரங்கள் அடர்ந்தோங்கிப் பிணைந்து நிற்குங்கரியகாடு' என்று சில சொற்களைத் திறம்படச்சேர்த்துக் கூறுதலானே ஒரு நொடியில் அவ்வோவியக்காரனாலுங் காட்டமுடியாத ஒரு பேரற்புத உணர்வினை நம்மனத்திலே விளைவிக்கும் ஆற்றல் உடையவனாவான். இஃது இவனுக்கு மிக இலேசிலே முடியுங் காரியமாம். இங்ஙனம் மனோபாவகத்தை எழுப்புதல் மிக இலேசிலே செய்யக்கூடியதொன்றாயினும், அம்மன இயல்பின் நுட்பம் அறிந்து அவ்வாறு செய்ய வல்லவரான நற்பெரும்புலவர் உலகிற் சிலரே யாவர். புலவனுடைய திறமையெல்லாம் "சில்வகை யெழுத்திற் பல்வகைப்பொருளைக்" காட்டுகின்ற அரும்பெருஞ் செய்கையினாலேதான் அறியப்படும் இங்ஙனம் பாட்டு வழக்கின் நுட்பமறிந்து பிறபாஷைகளிற் பிரசித்தியடைந்த நல்லிசைப்புலவர்கள் ஒமர், டாண்டே, ஷேக்ஸ்பியர், மில்டன், கீதே, காளிதாசர் முதலியோரும். நம் செந்தமிழில் திருவள்ளுவர், நக்கீரர், இளங்கோவடிகள், கூலவாணிகன்சாத்தனார், மாங்குடிமருதனார், சேக்கிழார் முதலானோர் நம் பண்டைக்காலத்துப் பழந்தமிழ்ப் புலவருமேயாம். இன்னும் இதனை விரிப்பிற் பெருகும்.

---

*Characteristics of the old Tamil Poetry.*

---

இனிப் பண்டைக்காலத்துத் தமிழ்ப்புலவரெல்லாரும் உலக இயற்கைத் திறம்பிறழாமல் அதனை நுணுகி யாராய்ந்து பாட்டுப்பாடும் உறுதிப்பாடு உடையராயிருந்தனர். உலக இயற்கையிற் காணப்படும் அருமை பெருமையினை மிக வியந்த

னர். தம்மனோபாவகத்திற்கு இசைந்தவண்ணமெல்லாம் உலக இயற்கையினைத் திரித்துக் கூறாமல், அவ்வுலக இயற்கையின் அழகின் வழியே தம் அறிவினைப் பொருந்தவைத்துத் தம் மனோபாவகத்தினை விருத்திசெய்து வந்தனர். இம்முறைமை நற்பெரும்புலவர்க்கு இன்றியமையாத சிறப்புடையதென்னுங் கருத்துப்பற்றியே ஜான்ரஸ்கின் என்னும் ஆங்கில மகாவித்துவான் ஸ்காட் என்னும் புலவனைப்பற்றிச் சொல்லவந்தவிடத்து "அவர் தம் உணர்வின்வழியே உலக இயற்கையினை நிறுத்திக்கொள்ளாமல், அவ்வுலக இயற்கையின் வழியே தாம் நின்றார்" என்று புகழ்ந்தெடுத்துக் கூறினார். ஆகவே, உலக இயற்கையின் வழியிலே நின்று பாட்டுப்பாடுதலே அருமையென்பதும், அதுவே நல்லிசைப்புலவர்க்கு அடையாளமாம் என்பதும் இதனால் நன்குபெறப்படும். பழந்தமிழ்ப் புலவர்களெல்லாரும் இந்நுணுக்கம் அறிந்து விளங்கினார்களென்பதற்குப் பழைய தமிழ்ப்பாட்டுக்களே சான்றாகும். எனினும், இதனை ஓர் உதாரணமுகத்தானும் விளக்கிக் காட்டுவாம்.

'முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்
குவளை உண்கண் குய்ப்புகை கமழத்
தான்துழந்து அட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின்மகிழ்ந்தன்று ஒண்ணுதல்முகனே" என்பது

குறுந்தொகையில் உள்ள ஒரு பாட்டு. தன்மகள் கணவன் வீட்டில் எப்படியிருக்கின்றாள் என்பதைக் கண்டறியும் பொருட்டுச் சென்ற செவிலித்தாய் அவ்விருவரும் மிகநேசமாய் இருப்பதைக் கண்டு தன்னுள் மகிழ்ந்து சொல்லியதாகப் பாடப்பட்டது. "தன்மகள் வற்றக்காய்ச்சின கட்டித் தயிரைப் பிசைந்த காந்தள் மலர் முகிழ்போற் சிவந்த மெல்லிய விரல்களால். இடுப்பிற் கட்டிய ஆடை சமையல் செய்யும் வினையினால் கழன்று அவிழ அதனைக் கழலாமல் உடுத்துக் கொண்டு

குவளைப் பூப்போன்ற மைதீட்டிய தன் கண்ணிலே தாளிப்புச் செய்யும் புகை பட்டு மணக்க அதனையும் பாராமல் தான் துடப்பினாலே துழாவி மிக அன்போடு சமைத்த தித்திப்பான புளிப் பாகினைத் தன் கணவன் மிக உருசியா யிருக்கின்றதென்று சொல்லிக்கொண்டே உண்ணுதலைப் பார்த்து அவள் முகம் உள்ளுக்குள்ளே நுட்பமாய் மகிழ்ச்சி யடைந்தது" என்பது இதன்பொருள். பாருங்கள்! இச்செய்யுளின் இயற்கை அழகும், மனோபாவக யியல்பும் எவ்வளவு அருமையாக இருக்கின்றன! கணவனும் மனைவியுமிருந்து இல்லறம் நிகழ்த்தும் ஒழுக்கம் முல்லை எனப்படு மாகலின், அவ்வொழுக்கம் நடைபெறுகின்ற முல்லை நிலத்திற்கு ஏற்ப 'முளிதயிர் பிசைந்த' என்றார். தன்கணவன்மே லுள்ள காதன்மிகுதியினால் பிறர் சமையல் செய்வதற்கு உடன்படாது தானேதன் மெல்லிய சிவந்தவிரலால் தயிரைப் பிசைதலும், கணவன் பசித்திருப்பானே என்னும் அவசரத்தாற் சமையல் விரைந்து செய்யும்போது இடுப்பிற் கட்டிய உயர்ந்த ஆடை கழலவும் பிசைந்த கையினைக் கழுவிவிட்டு உடுப்பதற்குந் தாமதமாகும் என்று அக்கையுடனே அதனைக் கட்டிக் கொள்ளுதலும் அங்ஙனம் பிசைந்து திருத்திய புளிப்பாகினைத் தாளிக்கும்போது மேல் எழும் புகை தன்குவளைக் கண்ணிற் படவும் அப்புறம் முகம் திரும்பினால் கெடுமென்று திரும்பாமல் அதனை விரைந்து துழாவலும், அங்ஙனந் தன் வருத்தத்தினையும் பாராமற் சமைத்த அப்புளிப் பாகினைக் கணவன் மகிழ்ந்துண்ணல் கண்டு தன் மகிழ்ச்சி வெளியே தெரியாமல் அவள் முகம் மலர்ந்துகாட்டுதலும் சில சொற்களால் மிக விளங்கச் சொல்லியநுண்மை பெரிதும் வியக்கற்பாலது. இப்பாட்டில் நல்லாசமான முல்லை நிலத்தில் கணவனும் மனைவியும் நேசமாய் மருவி வாழும் இயற்கை படம் எழுதிக் காட்டினாற்போல வெவ்வளவு எளிதாகவும் உண்மையாகவுஞ் சொல்லப்பட்டது! இப்பொருளருமையோடு இச்செய்யுளில் உள்ள சொற்கள் நீர்மடையில் தெளிநீர் மொழுமொழுவென்று ஓடுவதுபோல ஓசை

யின்பம் உடையவாய் ஒழுகுதலும், ஒன்றாயினும் பொருளின்றி வேண்டா கூறலாகாமல் முன்னும் பின்னு முள்ள பொருட் டொடர்புக்கு இடையேமுழுப்பதங்களாய் அமைந்து நிற்றலும் மிகவும் பாராட்டற்பாலன

இன்னும் பண்டைக் காலத்துத் தமிழ்ப்புலவர் உலக இயற்கையினை ஆங்காங்குத் திரிந்து கண்டு பெருங்களிப்பும் பேருற்சாகமும் உடையராய் வருத்தமின்றி இலேசாகப் பாட்டுக்கள் பாடினர் என்பதற்குத் தாம் வருணித்துச் சொல்லும் பொருள்களுக்கு எடுத்துக்காட்டும் உவமைகளே தக்க சான்றாம். ஓரிடத்தில் மான் கொம்பைப் பற்றிச் சொல்ல வந்தழி 'இருப்பை முறுக்கினாற்போலுங் கரிய பெரிய கொம்பு' என்னும் பொருள்பட "இரும்புதிரித்தன்ன மாயிருமருப்பு" என்றும், ஓரிடத்தில் இருவர் நேச ஒன்றுமையினைச் சொல்லும்போது, கத்தி உறைபோடுஞ் சிறிய தொழிலாளன் பிசினொடு சேர்த்த கல்லைப்போலப் பிரியோம்' என்னும் பொருள்படச் "சிறுகாரோடன் பயினொடு சேர்த்திய கற்போல் பிரியலம்" என்றும், ஓரிடத்தில் புறந்துறுத்திய நண்டின் கண்களுக்கு வேப்பம்பூ முகையினை உவமை எடுத்து "வேப்பு நனையன்ன நெடுங்கண்களவன்" என்றும், ஓரிடத்தில் 'வயல் நெல்புதிது ஈன்ற பசியகதிருக்குச் செல்வர்கள் தமது குதிரையின் உச்சியில் தூக்கிக்கட்டிய தையல் மூட்டுள்ள கவரியயினை' உவமையாக எடுத்து "முரசுடைச் செல்வர் புரவிச் சூட்டும் மூட்டுறு கவரி தூக்கியன்ன, செழுஞ் செய் நெல்லின் சேயரிப் புனிற்றுக், கதிர்" என்றும், ஓரிடத்தில் 'மழையில்லாத வானம் மீன்பூத்ததுபோல இலை நெருங்கிய முசுண்டைச் செடிகள் வெள்ளிய மலர்களைப் பூக்க' என்னும் பொருள்போதர "மழையில் வானம் மீன் அணிந்தன்ன, குழையமல் முசுண்டை வாலிய மலர" என்றும், ஓரிடத்தில் 'பஞ்சுபோலும் தலையினை யுடைய மலர்கள் நெருங்கும் இண்டைக்கொடிகளின் நீரில் நனைந்ததளிர்கள் நெய்யில் தோய்த்தனபோல்

விளங்கி இரண்டாக இருளைக் கூறுபடுத்தினாற்போல் ஒவ்வொரு தளிரும் இரண்டு கூறுபட்டனவாய்க் கரியசிறத்துடன் அசைய' என்னும் பொருள்படத் "துய்த்தலைப் பூவின் புதலிவர் ஈங்கை, நெய்த்தோய்த்தன்ன நீர் நனை அந்தளிர், இருவகிர் இருளின் ஈரியதுயல்வர" என்றும், ஓரிடத்தில், 'இறாமீன் பச்சை மஞ்சளின் பசிய முதுகைப்போல் சுற்றிலும் பொருத்துடம்பு உடையனவாய் அகழியிற் கிடக்கும்' என்பது விளங்க "முற்றுமறச்சட்பசும்புறங்கடுப்பச். சுற்றிய பிணர்சூழ் அகழியிறவு" என்றும், ஓரிடத்தில் 'நொச்சியிலை மயிலின் அடிபோல் மூன்று பிளப்பாய் இருக்கும்' என்பது தோன்ற "மயிலடி இலைய மாக்குரல் நொச்சி" என்றும், ஓரிடத்தில், 'கதிர் அரிந்துவிட்ட தினைப்பயிரின் தாள்போன்ற சிறிய பசுங்காலையுடைய நாரை ஓடும் நீரில் ஆரல் மீனைப் பார்த்துக்கொண்டு இருக்கும்' என்பது புலப்படத் "தினைத்தாள் அன்ன சிறு பசுங்கால, ஒழுகுநீர் ஆரல்பார்க்குங் குருகு" என்றும் போந்த வருணனை வாக்கியங்களானே பழைய தமிழ்ப்புலவரின் விழுமிய உலகியல் அறிவினை இனிது அறிந்துகொள்ளலாம். இன்னும் இவைபோன்ற உதாரணங்கள் நூறு நூறாகப் பெருக்கலாமேனும், இங்கு அதற்கு இடம்பெறுதல் கூடாமையான் இதனை இவ்வளவில் நிறுத்துகின்றாம். இத்துணை நுட்பமான உலகியல் அறிவு பண்டைக்காலத்துத் தண்டமிழ்ப்புலவரிடங் காணப்படுதல் போல, மற்றைப்பாஷைகளில் வல்லராய் விளங்கிய பழம் புலவரிடத்துங் காண்டல் அரிது. இன்னும் இவ்வாறே பழைய தமிழ்ப்புலவர் உலக இயற்கைப் பொருட்காட்சிகளை வருணித்துக்கூறிய முறையும், அவ்வுலக இயற்கைக்கும், மக்களியற்கைக்கும் உள்ள பொருத்தத்தைப்பற்றி அவர் வெளியிட்ட அரிய கருத்துக்களும் நாம் தனியே விரித்தெழுதும் 'தமிழ்ச்செய்யுள் வழக்கு' வியாசத்தில் விரித்துக்காட்டுவாம். ஆண்டுக்கண்டுகொள்க.

---

*The nature of the literary works produced in the classic period from 400 B. C. to 100 A. D. and their relation to முல்லைப்பாட்டு with a short historic account of the age.*

---

இனிக் கிறிஸ்து பிறப்பதற்கு முன் நூற்றாண்டுகளிலே மிகப் பிரசித்தியுற்று விளங்கிய புலவர் காலமும், அவர் பிறந்த பின் நூற்றாண்டிலே அவ்வாறு விளங்கிய புலவர் காலமும் தமிழ்மொழி மிக உயர்ந்த நிலையிலே இருந்து திகழ்ந்த காலமென்று அறிதல்வேண்டும். கிறிஸ்துபிறப்பதற்குமுன்ஒரு நானூறு வருடமும் அவர்பிறந்த பின் ஒருநூறு வருடமும் சேர்த்துமுடிந்த ஓர்ஐந்நூறு வருடமும் தமிழ்மொழி மறுவற்றமதிபோற்கலைநிரம்பி விளங்கிய காலமாகும். இக்காலத்திலே சிறந்தபுலவர் பலர் தோன்றிப் பலவகையான அரிய பெரிய தமிழ் நூல்கள் இயற்றினர். இப்புலவர்களை ஆதரிக்க அரசர் பலரும் வள்ளல்களும் ஆங்காங்கு மிருந்திருந்தனர். தமிழ அரசர்கள் பலர் கல்வி வளத்தானும் செல்வ வளத்தானும் மேம்பட்டுப் போர் வல்லமையினும் பெருமையடைந்து தமிழ்மொழியினைப் பலவிடங்களினும் பெருகச் செய்வதில் கருத்துடையராய் இருந்தனர். இக்காலத்திலேதான் தனக்கு ஒப்பும் உயர்வும் இன்றி விளங்கும் திருக்குறள் என்னும் அரும்பெரு நூல் எழுதப்பட்டது ; சிலப்பதிகாரம், மணிமேகலை முதலான சிறந்த தமிழ்க்காப்பியங்களும், பழமொழி, நான்மணிக்கடிகை முதலான அற நூல்களும் தோற்றமுற்று எழுந்தன. இவ்வைந்நூறு வருடங்களுக்கு முன்னிருந்த தமிழ்ப்புலவர்களாற் பாடப்பட்டுச் சிதறிக்கிடந்த அருந்தமிழ்ப்பாட்டுக்களெல்லாம் ஒருங்கு தொகுக்கப்பட்டுப் பிரித்துப் புறநானூறு, அகநானூறு கலி முதலாக வகை வகைத் தொகை நூல்களாக இக்காலத்திலேதான் ஒழுங்குபடுத்தப்பட்டன பண்டைக்காலத்திலே செய்யப்பட்ட தொல்காப்பியம் என்னும் அரிய பெரிய தமிழிலக்கணத்தில் மிகச் சிறந்த பகுதியான பொருளதிகாரத்தின்

விரிவையெல்லாம் சுருக்கி அதனை வடித்த சாரமாக இறைய னாகப்பொருள் என்னும் * மனோதத்துவநூலும் இக்காலத் திலேதான் எழுதப்பட்டது. இன்னும் இக்காலத்திலே இன்றி யமையாது அறியற்பாலதாம் விசேடம் ஒன்று உண்டு இத ற்குமுன்னெல்லாம் தமிழ் பெரும்பாலும் செய்யுள் வழக்கிலே பெருகி வந்தது; இக்காலத்தில் அதனோடு † உரைவழக்கும் பயிலத் தொடங்கிற்று; சொல் விழுப்பமும் பொருள் விழுப் பமும் பொருந்த மிக இனியதோர் உரை ‡ மிக நுணுக்கமான அறிவினையுடைய நக்கிரர் என்னும் நல்லிசைப் புலவரால் இறையனாரகப் பொருள் என்னும் நூலுக்கு எழுதப்பட்டது. இவ்வுரை சூத்திரத்தின் பொருளை இனிது விளக்கும்பொரு ட்டே எழுதப்பட்டதாயினும் மற்றை உரைகள்போற் சுருங் காது மிகவிரிந்து இன்றியமையாது உணர்தற்பாலனவாம் அரும்பெருந் தமிழ் நுட்பங்களெல்லாம் ஒருங்கு நிரம்பப் பொலிகின்றது. ஆகவே, இக்காலத்தில் மிகச் சிறந்த உரை காரராய்த் தோன்றித் தமிழ்மொழியிற் பலவகையான நல்ல சீர்திருத்தங்களெல்லாம் செய்து அதனை விருத்தி செய்த பெரும்புலவர் ஆசிரியர் நக்கிரனார்தாமென்று அறிதல்வேண் டும். இவ்வைந்நூறு வருடத்திற் பெருகி வழங்கிய தமிழ் நூல்களில் வடமொழிக்கு உரிய விருத்தப்பா என்பது இன் னும் வந்து புகுதவே இல்லை. இதுநிற்க.

இனி இங்ஙனம் தமிழ் விருத்தியாவதற்கு ஒரு பெருங் காரணமாய் இருந்தது யாது என்று ஆராயப் புகுந்தால் பௌத்தசமயம் ஆங்காங்குப் பிரபலமுற்றுப் பரவி வந்தமை யே என்பது புலப்படுவதாயிற்று பண்டைக்காலத்தே ஆசி யாக் கண்டத்தின் இடையிலே இருந்த ஆரியர் இந்தியாவிற் புகுதற்குமுன் இந்தியா முழுவதும் பரவியிருந்த சாதியார் தமிழரே யாவர். தமிழர் இருந்த இவ்விந்தியநாடு பெரும் பாலும் வெப்பம் மிகுந்த நாடாதலால் இதிலிருந்த அவரெல் லாம், குளிர் மிகுந்த ஆசியாக்கண்டத்தின் இடையிலேயுள்ள ஆரியமக்களைப்போல் உடம்புவலிமை யுடையராக இருந்திலர்.

* Psychology. † Prose. ‡ An able critic.

உடம்பில் உரங்குன்றியிருந்தமையால் தமிழர் தமக்குள்ளே கலகம் விளைவித்து ஒற்றுமை குலைவதற்கு இடம்பெறுதலின் றிப் பெரும்பாலும் ஒருமைப்பாடு உடையராய் நாட்கழித்தனர்; உடல்வலியின் குறைவால் அவர் மனஅடக்கம்பெற்று எதனையும் ஆழ்ந்தறியும் இயல்புடையராயிருந்தனர். உலக இயற்கையிலுள்ள அழகினைக்கண்டு வியந்து அவ்வளவில் அமைந்துவிடாமல் அவ்வியற்கையின் உள்நுழைந்து அங்கெல்லாம் பிறழாத * ஓர் ஒற்றுமையும் அவ்வொற்றுமையினை நிலைப்படுத்தி மறைந்துகிடக்கும் † ஓர் உயிர்ப்பொருளினையும் கண்டறிந்து களிப்படைந்தனர். அங்ஙனம் அவ்வுலக இயற்கையில் மறைந்து விரிந்துகிடக்கும் அவ்வுயிர்ப்பொருளினையே கடவுள் என்று துணிந்து அதனை மனத்தால் தழுதழுப்ப வழிபட்டு வாழ்ந்தனர். அவர் தம் உடல்வலியின் குறைவால் பலவகையான ‡ சடங்குகள் இயற்றி வழிபடுவதற்கு ஒருப்படாமல் தனியே ஓரிடத்தில் மனஅமைதியோடு இருந்து அக்கடவுட்பொருளை மனத்தாற் பலகால் உறைப்பச் சிந்தித்து அறிவாழம்பெற்றுப் பிரகாசிப்பாராயினர். இவர் இவ்வாறு இருப்ப, ஆசியாவின் இடையிலே யிருந்த ஆரியரோ குளிரால் உடம்பு இறுகி மிக்க வலிவும் சுருசுருப்பும் உடையராயிருந்தனர். உடம்பில் வலிவுமிக உடைமையால் மனஅடக்கம்பெற்று ஓரிடத்தில் இருக்கப்பெறுமல் தொகுதிதொகுதியாய் அவர் பல திசையிற் பிரிந்துபோய் அங்குள்ளாரோடு போர்புரிந்து அவரையெல்லாம் தம் விருப்பத்தின் வழியிலே நிறுத்திக்கொண்டு மிகுந்த செல்வாக்குடன் வாழ்ந்துவருவாராயினர். அவர் மற்றைச்சாதியாருடன் போர்புரியப் போகுங்காலங்களின் எல்லாம் தாமே வெற்றிபெறும்பொருட்டு அதனைப் பெறுவிக்கும் பொருள் யாது என்று நினைந்தார்; அவ்வாறு நினையும்போதெல்லாம் உடம்பின் சுருசுருப்பால் அவர் அறிவு அமைதியுற்று ஆழ்ந்துசெல்லாமையால் உலகம் நடைபெறுதற்கு வெளிக்காரணங்களாய்த் தோன்றும் சூரியன், சந்திரன்,

* Uniformity. † A spiritual being. ‡ Ceremonies.

இந்திரன் முதலியவற்றையே கடவுளெனத் துணிந்து வழி படுவர்; வழிபடுங்காலங்களின் எல்லாம் தம் உடம்பின் வலிவி னூற் பலவகையான விலங்குகளைக்கொன்று உணவு ஊட்டி வேள்விசெய்தும், பலவகையான வேள்விச்சடங்குகள் இயற் றியும் வந்தனர். இருக்கு வேதத்தின் முதல் மண்டலத்தி லுள்ள

"பகைவரை அழிப்பவனே! இவ்வழி பறிகாரர் கூட் டங்களின் தலைவரை எல்லாம் ஒன்றாகத் திரட்டி நின் அக ன்ற அடியினால் அவர்களைத் தேய்த்துவிடுக! நின் அடி அகல மாய் இருக்கின்றது.

"ஓ இந்திரனே! சிவந்த நிறம் உடையராய் ஊளை இடு கின்ற பிசாசரை அழித்துவிடுக. இவ்விராக்ஷதரை யெல்லாம் அழித்துவிடுக" என்பதுபோன்ற பாட்டுக்களால் அவர் அவ் வியல்பு உடையராதல் துணியப்படும். இவ்வியல்பு உள்ளஆரி யர் இந்தியாவினுட்புகுந்தபோது அங்கு தமக்கு முன்னிருந்த தமிழரில் அறிவுதிருந்தாது சிறிது கொடுந் தோற்றம் உடைய ராய் இருந்தவரைப் பிசாசர் இராக்கதர் என்று சொல்லினர். கிரேக்கர் மற்றைச்சாதியாரைப் பார்பேரியர் என்றும் தமிழர் ஏனையோரை மிலேச்சர் என்றும் அழைத்தல்போல ஆரியரும் தமிழரை அவ்வாறு பெயரிட்டார். சரீரவலிமை மிகவுடைய ஆரியர் இந்தியாவிற்புகுதலும் தமிழரிற் சிலர் அவரோடு போர் புரிந்து தோல்வி அடைந்தனர்; சிலர் மலையினும் காடு களினும்போய் இருந்தனர்; சிலர் தாம் தாம் இருந்தஇடம் விட்டுப் பெயராமல் ஆரியரோடு உறவாடி அவர்வழக்க ஒழுக் கங்களிற் சிலவற்றைத் தாம் தழுவிக்கொண்டு ஒற்றுமையாய் வாழத் தொடங்கினர். இவ்வாறு இவ்விருவகைச் சாதியாரும் ஒருவரோடு ஒருவர் மருவிவாழும் நாட்களில் அவ்வவர்தத்தம் வழக்க ஒழுக்கங்களை முற்றும் மாறுபடாமல் அனுசரித்து வந்த னர். இக்காலத்தில் ஆரியருட் குருக்கள்மார் பலர் தோன்றிப் பலவகையான வேள்விகள் செய்யவேண்டும் என்று வற் புறுத்தி அவற்றை அரசர் உதவியாற் செய்துவந்தனர்; அப்

போதுதான் அவ்வேள்விச் சடங்குகள் செய்யவேண்டும்முறையினை மிகவிரித்தெழுதிப் பிராமணங்கள் இயற்றப்பட்டன. இவ்வாறுவேள்விகளும் வேள்விச்சடங்குகளும் மிருந்துவரவே இவற்றிற்கு இயற்கையிலே உடம்படாத தமிழரில் அறிவுடையோர் இவற்றை 'இவ்வாறு செய்தலாற் பெறப்படும்பயன் என்னை' என்று தம்ஆரிய நண்பரோடு நயமாய்க் கலந்து வாதிட்டு அவரிற் சிலரைத் தம்வயப்படுத்திக் கொண்டார். இங்ஙனந் தமழரின் அறிவாழ ஆராய்ச்சியினை ஆரிய நன்மக்கள் சிலர்தாமுந் தழுவி ஒழுகப்புகுந்த காலத்திலேதான் உபநிடதங்கள் எழுதப்பட்டன. உபநிடதங்கள் எழுதப்பட்ட பின்னும் விலங்கினங்களைப் பலியிடுவித்துச் செய்யும் வேள்விகள் சிறிதுங் குறையாமல் மிகுந்துவந்தமையானும், ஆரியக் குருக்கள்மார் தங்கொள்கைக்கு இணங்காத தமிழரையும் அதுசெய்யும்படி வலிந்து வருத்தினமையானும் ஆரியர்க்குந் தமிழர்க்கும் இதன்பொருட்டு வாதப் பிரதிவாதங்கள் நிகழ அச்சமயத்தில் வடநாட்டில் இருந்த தமிழஅரசர் வமிசத்தில் கௌதமசாக்கியர் என்பவர் தோன்றிப் பழைய தமிழ் மக்கள் ஆராய்ந்துவந்த அரிய நல்லொழுக்கங்களை எடுத்து விரித்துச் சொல்லப்புகுந்தார். சாதாரண மக்கள் மனமுங் கரைந்து உருகும்படி மிக இரக்கத்துடன் நல்லொழுக்கங்களின் சிறப்பை எடுத்துவிரித்து இந்நல்லொழுக்கங்களை ஒருவன்வழுவாமல் தழுவிநடப்பானாயின் அவனுக்கு எல்லாத் துன்பங்களினின்றும் விடுபடுகின்ற நிருவாணம் கிடைக்கும் என்றும், அறிவில்லாத ஏழைப் பிராணிகளை நூறு நூறாகக் கொன்று வேள்விமுதலியன செய்தலால் மேலு மேலும் பாவமே விளையு மல்லது புண்ணியமாகாதென்றும் கௌதமர் உபந்நியசித்துவந்தார். மக்கள் உள்ளத்தை இலேசிலே கவர்ந்து உருக்கும் படியான கௌதமர் கொள்கைகள் சில நாளிலே எங்கும் பரவின. மக்களெல்லாரும் ஆரியக்குருக்கள்மார் சொற்களில் ஐயப்பட்டுத்தம் அறிவால் நல்லனபலவும் ஆராயப்புகுந்தார்கள். எங்கும் அவரவர் தாராளமாய்த்தங்கருத்

தில் தோன்றும் நுட்பங்களை வெளியிடத்துணிந்தனர். * பிராஞ்சு தேசத்தில் தோன்றியதைப்போல் எங்கும் ஒரு பெரிய மாறுதல் உண்டாவதாயிற்று. இனி இங்ஙனம் ஒரு பெரிய மாறுதல் இந்திய நாடு முழுவதும் சுழன்று வரும்போது, வெற்றியாளராய் ஆங்காங்குப்புகுந்து வசிக்கும் ஆரியமக்களுக்கு இதுகாறும் அஞ்சிக்கிடந்த தென்னாட்டுத் தமிழர் அவ்வச்சம்தீர்ந்து தாம் இரகசியத்தில் ஆராய்ந்துவைத்த அரிய பெரிய நுண்பொருள்களை வெளியிட்டுத்தமது தமிழ்மொழியினை விருத்திசெய்யத்தொடங்கினர். இங்ஙனங் கிறிஸ்து பிறப்பதற்கு முன் ஒரு நானூறுவருடமும் பின் ஒரு நூறுவருடமும் மிகப் பிரசித்தியுற்றுப் பெருகிய பௌத்த சமயவிருத்தியே தமிழ் மொழியில் அக்காலத்து வரும் பெருந்தமிழ் நூல்கள் பலதோன்றுவதற்கு ஒரு பெருங்காரணமாயிற்று என்று அறிதல்வேண்டும். ஆசிரியர். திருவள்ளுவனார் இயற்றிய அரிய பெரிய திருக்குறள் என்னும்நூலில் கொல்லாமை, புலால்மறுத்தல், ஒழுக்கமுடைமை யென்னுந் தமிழர்க்குரிய அறிவாழ நுட்பப்பொருள்கள் பலகாலும் எடுத்துவற்புறுத்தப்படுதல் காண்க. இனி இப்பொருள்கள் எல்லாம் பௌத்தசமய நூல்களிலிருந்தெடுத்துச் சொல்லப்பட்டன என்பாரும், திருவள்ளுவனார் பௌத்தரே என்பாரும் உளர். இயற்கையாகத் தமிழர்க்குரிய ஒழுக்கங்களின் சிறப்பையே கௌதமரென்னுந் தமிழர் விளக்கவந்தமையால், அவை அவர் சொன்னபின் எடுத்துக்கொள்ளப்பட்டன என்பது பொருந்தாது. திருவள்ளுவனார் முதலிய பெரியோர் தமக்கும் தம் வமிசத்தார்க்கும் இயற்கையிலே தோன்றிய அரும்பொருள்களைப் பௌத்தசமயம் யாண்டும் விரிந்து பரவியகாலத்தில் தடையின்றிச் சொல்லுவதற்கு இடம்பெற்றாராகலின், அக்கருத்துக்கள் திருவள்ளுவனார்க்கும் கௌதம சாக்கியருக்கும் பொதுவாவனவேயாம் என்று துணிக.

"அவிசொரிந்து ஆயிரம்வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத்து உண்ணாமை நன்று"

---

* The French Revolution.

என்னுந்திருக்குறளில் ஆசிரியர் ஆரியமக்கள் செய்யும் வேள்விப்பயனை மறுத்துக் கொல்லாமையின் சிறப்பை வலியு றுத்திக்கூறியதுங்காண்க. இன்னும் இவ்வாறே ஆசிரியர் ஆங் காங்கு ஆரியமக்கள் செய்யும் மற்றைக் கருமச்சடங்குகளையும் மறுத்துக்கூறுதல் கண்டு கொள்க. ஈண்டு அவை எல்லாம் எடுத்துரைப்பிற் பெருகும். இனி இவ்வாறு ஒருகாலத்தில் நடைபெறும் ஒழுக்கங்களுக்கும் அக்காலத்தில் தோன்றும் நூல்களுக்கும் பெரியதோர் இயைபு உண்டென்பதனை விளக் கவே இவ்வோரைந்நூறு வருடத்தின் சரித்திர நிகழ்ச்சியினை ஒருசிறிது விரித்துக்கூறினும். ஒருநூலின் இயல்பை உள்ள வாறு உணர்தற்கு அந்நூல் எழுதப்பட்ட காலத்தின் இயற்கை இன்றியமையாது அறியற்பாலதாம். இதுபற்றியே ஆங்கில மொழியில் இவைபோன்ற நுட்பவாராய்ச்சிகள் பல எழுதிய உவில்லியம் மின்டோ என்பவர் * "காலப்போக்கு என்பது இன்னதென்று தொட்டு அறியப்படாத ஓர் இயற்கை, அஃது அக்காலத்து மக்கள் இயற்றும் நூல்களினும், சிற்பவேலைகளி னும், உடைகளினும், அவர்கள் செய்யும் வாணிகவாழ்க்கை யினும், அவர்கள் நிருமிக்குந்தொழிற் சாலைகளினும் எல்லாம் தன் அடையாளத்தைப் பதிய முத்திரிக்கின்றது. ஒரு புலவ னும் இக்கால இயற்கையின் வழி நின்றே எழுதுகின்றான். அக்கால இயற்கை அல்லது அம்மக்கள் ஒப்புரவு அவன் எழுது வனவற்றை யெல்லாம் உருவாக்கி நிறம் ஊட்டுகின்றது. இதனை நாம் கண்டறிவதற்கு அக்காலத்தின் பொது இயற்கை யும், அம்மக்கள் நடையினியற்கையும், அவன் இருக்கும் இடத் தின் இயற்கையும் இன்றியமையாது ஆராயற்பாலனவாம்", என்று மிகநுட்பமாக எடுத்து மொழிந்திடார். இதுகிடக்க.

இனி இவ்வோரைந்நூறுவருடகாலத்தில் தோன்றிய நூல்களெல்லாம் பெரும்பாலும் அக்காலஇயற்கைபிரதிபலிக்க விளங்கும் ஒரே தன்மை உடையனவென்று அறிதல் வேண் டும். அறிவு ஆழமின்றி ஆரியமக்கள் செய்யும் வீணான கருமங்

* The Literatute of Tee Georgian Era.

களிற் கட்டுப்படாமல் தனியே பிரிந்து நின்ற தமிழ்மக்கள் உலக இயற்கையினையும் மனிதஇயற்கையினையும் உள்ளுருவி நுழைந்து ஆராய்ந்து தாங்கண்ட அரியபொருள் நுட்பங்கள் அமைத்து நூல் இயற்றினர். ஆகவே, உலகஇயற்கையினையும் மனிதஇயற்கையினையும் ஆராயும் ஆராய்ச்சி இக்காலத்துத் தோன்றியநூல்கட்கெல்லாம் பொதுத்தன்மையென்றுஉணர்க. இனி, இவ்வுலக இயற்கையினை ஆராயும் நூல்கள் எல்லாம் புறப்பொருள் எனவும், மனிதஇயற்கையினை ஆராய்வன எல்லாம் அகப்பொருள் எனவும் தொல்லாசிரியரால் வகுக்கப்பட்டன. இவற்றுள் அகப்பொருள்என்பது, ஆண் பெண் என்னும் இருபாலாரையும் செறியப் பொருத்துவதாய், மற்றெல்லா உணர்வுகளையும் தனக்குக்கீழாக நிறுத்தித் தான் அவற்றின் மேல் அமர்ந்து தனக்குநிகரின்றிப் பெருமையுடன் தோன்றுவதாய், இன்பமுந்துன்பமுமெல்லாந் தோன்றுதற்குத்தான் ஓர் நிலைக்களனாய், எல்லாஉலகங்களும் எல்லாப்பொருள்களும் தன்னைச் சுற்றிச் சுழன்று செல்லத் தான் அவற்றின் இடையே சிறிதுந் திரிதலின்றி நிலைபெற்று விளங்குவதாய் உள்ள *அன்பு என்பதனை அடியாகக்கொண்டு மனிதஇயற்கை யெல்லாம் ஒருங்கே ஆராய்வதாம். இனிப்புறப்பொருள் என்பது, மக்கள் உலக இயற்கையுடன் பொருந்தித் தமக்கு இன்றியமையாது வேண்டப்படும் பலவகைக்கருமங்களையும் முற்றுவித்தற் பொருட்டுச் செய்யும் முயற்சி வேறுபாடுகளும் பிறவும் தெளிவாய் ஆராய்வதாம்.

இனிப் பொதுவாக எல்லா மாந்தர்க்கும் உரிய இயற்கையினைவிவகரிப்பதாகலின் அகப்பொருள் ஒழுக்கம் பயின்றுவரும் பாட்டுக்களில் ஓர் ஆண்மகனையும் ஒரு பெண்மகளையும் சிறப்பாக எடுத்து அவர் பெயர் சொல்லி அவை எழுதப்படுதல் இல்லை. எல்லா மனிதர்க்கும் பொதுவாய் வருகின்ற அன்பினால் நிகழும் ஐந்திணை ஒழுக்கத்தை ஒருவர் இருவர்க்கு

* Love.

வரையறுத்துக்கூறுதல், அவ்வன்பின் ஐந்திணை ஒழுக்கம் மற்றையோர்க்கு இல்லையாம் போலும் என்று ஓர் ஐயஉணர்வு தோற்றி வழுவாய் முடிந்திடும் ஆகையால் அப்பாட்டுக்கள் எல்லாம் குறித்து ஒருவர் பெயர் சொல்லாமலே வரையப்படும் என்பது தெளிக. இது பற்றியே ஆசிரியர் தொல்காப்பியனார்

"மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும்
சுட்டி ஒருவர்ப் பெயர் கொளப் பெறார்" என்றார்.

இனி அது போற் பொதுவாக அன்றி அவ்அவர் தத்தம் முயற்சி வேறுபாடுகளுக்கு ஏற்பப் பலவகைப்பட்ட உணர்வும் பல வகைப்பட்ட செயலும் உடையராய் உலக நடையறிந்து ஒழுகுவர் ஆகலின் புறப்பொருள் ஒழுக்கம்பயின்றுவரும் பாட்டுக்களில் அவ்வவர் பெயர், குணம், செயல் முதலியன எல்லாம் சொல்லி அவை எழுதப்படும் என்க. ஒருவர் குணஞ் செயல் மற்றொருவர் குணஞ்செயல்போலின்றி உலகநடையிற் பெரும்பாலும் வேறுபட்டு வெளியேதோன்றிக் கிடத்தலால், அங்ஙனம் வெளிப்பட்டுத் தோன்றும் குணஞ்செயல்களைக் கூறும் புறத்திணைப்பாட்டுக்களில் அக்குணஞ்செயல்கட்கு உரியோர் பெயர், கூறல்வேண்டுவது இன்றியமையாததேயாம் என்க. இதுபற்றியே ஆசிரியர் தொல்காப்பியனார்,

"புறத்திணை மருங்கிற் பொருந்தின் அல்லது
அகத்திணை மருங்கின் அளவுதல் இலவே" என்றார்.

இனி அகம்புறம் என்னும் இருவகை ஒழுக்கமும் கலந்து வரும் பாட்டுக்களில் அக ஒழுக்கமே பெரும்பாலும் முன்னும் பின்னும் தொடர்புற்றுச் செல்ல அதன் இடையிலே ஒருபுற ஒழுக்கம் சிறுகி வருமாயின் அவற்றுள்ளும் ஒருவர் பெயர் குறித்துச் சொல்லப்படமாட்டாது. அவ்வாறின்றி அவற்றுள் முன்னும் பின்னும் ஒரு புறஒழுக்கம் தொடர்புற்றுச் செல்ல இடையிலே ஓர் அகஒழுக்கம் குறுகி வருமாயின் அவற்றுள் அவ்வொழுக்கம் உடையார் பெயர் குறித்துச் சொல்லப்படும்.

இவ்வாறன்றி அவ்விரண்டும் இணைந்து சமனாய் வருமாயின் அங்கும் அம்மக்கள் பெயர் சொல்லப்படும் என்பது அறிக. இங்குச் சொல்லப்பட்ட இவ்விலக்கணங்கள் இவ்வைந்நூறு வருடகாலத்தில் பிறந்த நூல்களின் எல்லாம் இனிது அறியப்படும்.

---

*The nature of முல்லைப்பாட்டு, and its artistic excellence.*

---

இனி இங்கு ஆராய்தற்பொருட்டு எடுத்துக்கொண்ட முல்லைப்பாட்டில் "மனைவியைப்பிரிந்து மற்றை வேந்தரோடு போர் செய்யப்போகின்றதலைவன் தான்பிரிவதனை அவளுக்குநயமாக உணர்த்திக்கார்ப்பருவத் தொடக்கத்தில் வருவேன் அதுகாறும் நீ ஆற்றிக்கொண்டு இருஎன்று சொல்லிப் பிரிய அச்சொல்வழி ஆற்றியிருந்தவள் அவன் சொன்ன கார்ப்பருவம் வரக்கண்டும் அவன் வந்திலாமையின் பெரிதும் ஆற்றாளாயினள்; பின் பெருமுதுபெண்டிர் பலவகையால் ஆற்றுவிக்கவும் ஆற்றாதவள் இங்ஙனம் ஆற்றாது வருந்தல் கணவன் சொல்லிய சொல்லைத் தவறியதாய் முடியும் ஆதலால் அவர் வருங்காறும் ஆற்றுதலே முறையென்று பொறுமையுடன் இருந்த தலைவியிடத்துச் சென்ற தலைவன் மீண்டுவந்தமை "என்னும் அகப்பொருள் முன்னும் பின்னும் தொடர்புற்றுச் செல்ல, அப்பொருளுக்கு இடையிலேமாத்திரம் போர்மேற்சென்ற தலைமகன்பாசறையில்இருக்கும் புறப்பொருள்இருப்புச் சொல்லப்பட்டமையால் இதில் தலைமகன் தலைமகள் பெயர் சொல்லப்படவில்லை என்று அறிக. இங்ஙனந் தலைமகன் தலைமகளைப் பிரியும்போது ஆற்றுவித்துப்போதலும், போனபின் அவன் வினைமுடித்து வருந்துணையும் அவள் ஆற்றியிருத்தலும் இங்குச் சொல்லப்பட்ட தலைமக்களுக்கேயன்றி எல்லார்க்கும் உரியன ஆகையால் ஆசிரியர் அவர் பெயர் சொல்லாமைபற்றி இழுக்கு இல்லையென்க.

இனி முல்லை என்னும் அகஒழுக்கத்தோடு இயைபு உடைய புற ஒழுக்கம் வஞ்சி என்பதாம்; "வஞ்சிதானே முல்லையது புறனே" என்றார் தொல்காப்பியனாரும். வஞ்சி என்பது ஓர் அரசன் வேற்று அரசன் நாடு கைப்பற்றும்பொருட்டுப் படையெடுத்துச் செல்வது. வஞ்சித்திணை முல்லைக்குப் புறன் ஆனவாறு எங்ஙனம் எனின்;—மனைவி கணவனைப் பிரிந்து மனையில் இருப்பதுபோல அவனும் பாடிவீட்டில் இருப்பான் ஆகலானும், தலைமகள் வீடு காட்டில் இருப்பது போலப் பாடி வீடும் பகைவர் நகர்க்கு அரணான காட்டில் அமைக்கப்படும் ஆகலானும், முல்லையும் வஞ்சியுந் தம்முள் இயைபு உடைய ஆயின என்க.

இனி நப்பூதனார் முல்லை என்னும் அக ஒழுக்கத்தினை விரித்துச் செய்யுள் இயற்றுகின்றார் ஆதலின், அதனோடு இயைபுடைய வஞ்சி ஒழுக்கத்தினை அரசன் பகைவர்மேற் சென்று பாசறையில் இருக்கும் இருப்புக்கூறும் முகத்தால் அமைத்துக் கூறுகின்றார். இவ்வாறு தாம் எடுத்துக்கொண்ட பொருளுக்கு மாறுபடாமல் இவ்வாசிரியர் வேறு பொருளைப் பொருத்தி உரைக்கும் நுணுக்கம் மிகவும் பாராட்டற்பாலதாம்

இன்னுந் தாம் கூறல்வேண்டும் முதன்மையான ஒரு பொருளைப் பொறுக்கான சொற்றொகுதியினால் எடுத்துக் கோவையாகத்திரித்து நூற்றுக்கொண்டு செல்லும்போது, அப்பொருளின் இடையிலே அதனோடு இயைபு உடைய வேறோர் பொருளை இணைத்துச் சொல்லுஞ் சமயம் நேருமாயின் பொருளின்பம் கெடாமல் இடன் அறிந்து அதனைப் பிணைப்பது நற்புலவரிடத்துள்ள அரிய வினைத்திறமை ஆகுமென்று அறிதல்வேண்டும். இவ்வரிய வினைத்திறமை நப்பூதனார் இயற்றிய இச்செய்யுளின்கண் வெள்ளிடைமலைபோல் விளங்கிக் கிடக்கின்றது. முல்லை என்னும் அக ஒழுக்கத்தினை விதந்து சொல்லவந்த ஆசிரியர் அதனை முற்றுங்கூறி முடித்தபின்

அதனோடு இயைபுஉடைய அரசன்மேற்செலவான வஞ்சி யைக் கூறுவாராயின். கற்கின்றவர்க்குப் பின் ஒட்டிச் சொல் லப்படும் வஞ்சி ஒழுக்கத்தினைக் கேட்டலிற் கருத்து ஊன் றுமையே அன்றி, இருவேறு ஒழுக்கங்கள் தனித்தனியே சொல்லப்பட்டும் ஒன்றற்கே உரிய முல்லை என்னும் பெயர் சூட்டிய குற்றமும் உண்டாகும். அதுவேயன்றி, முல்லைப் பொருளுக்கு நடுவிலே எங்கேனும் ஓரிடத்திற் பொருத்த மின்றி அவ்வஞ்சிப் பொருளை மாட்டிவிடினும் கற்போர் உண ர்வு சலிப்பு அடையும் ஆகலின் அதுவுங் குற்றமேயாகும். இனி இக்குற்றமெல்லாம் அணுகாமல் இணங்கப்பொருத்து நின்ற இடம் யாதெனில் ;—கூறுவாம். சொல்லப்படுகின்ற முதன்மைப்பொருள் முற்றும் முடிவுபெறாமல் காற்பங்கோ அல்லது அரைப்பங்கோ ஓரிடத்திற் பொருள் சிறிது கூடி நின்று கற்போர்க்கு "இனி இஃது எங்ஙனம் முடியும்! எங்ஙனம்முடியும்!" என்னும் முடிவு அறிவும் விருப்பத் தினை எழுப்பி அவரதனை முழுதுங் கற்றுத் துறை போகும்வண்ணம் அப்பொருள் இடையறுந்து நிற்கும் இடமே பிறபொருளை இணைப்பதற்கு இசைவான சந்துவெளியாம் என்க. அதுபோல் இப்பாட்டில் முல்லைப் பொருள் இடையறுந்து நிற்கும் சந்துவெளி யாதெனில்;— தலைமகன் கூறிய கார்ப்பருவம் வருதலை உணர்ந்து ஆற்றுமல் அழுதுவருந்தும் நங்கைக்கு நற்சொற்கேட்டுவந்த பெருமுது பெண்டிர் "நாங்களும் படைத்தலைவரும் கேட்ட நற்சொ லால் நின்காதலன் எடுத்துப்போன கருமம் விரைவிலே முடி த்துத் திரும்பி உன்னுடன் வந்து சேர்வன்; அவன்வரும் வரையில் நீ ஆற்றிக்கொண்டு இருத்தல்வேண்டு" மென்று பல காலுஞ் சொல்லி வற்புறுத்தவும் வற்புறுத்தவும் அவள் அவர் சொற்களைக் கேளாமல் பூப்போன்ற கண்ணில் நீர்முத்தைப் போல் துளித்துளியாய்விழக் கலுழ்ந்து வருந்தினுள் என உகூ-வது வரியில் முல்லைப்பொருள் முற்றும் முடியாமல் இடையறுந்து நிற்கின்றது காண்க. இப்பாட்டினைக் கற்போர்

இவ்வளவில் தாங்கற்பதை நிறுத்திவிடாமல் இங்ஙனம் வருந்திய அப்பெண்மணி பின் எவ்வாறு ஆயினள் என்பதனை அறிவதற்கு மிகவிழைவர்; இங்ஙனம் அவர் முடிவறியும் விழைவால் மேலுங் கற்பதற்கு மனவெழுச்சி மிகுந்து நிற்கும்பொழுது பிறபொருள் இடையே இணைத்துச் சொல்லப்படுமாயினும், அதனால் தாம் சலிப்பு அடையாமல் அவ்விடைப்பட்ட பொருளையுங் கற்று மேற்சென்று பொருள்முடிவுகாண்பரென்பது தெற்றென விளங்கும். ஆகவே, இங்ஙனம் முல்லைப்பொருள் இடையறுந்து நிற்கும் இடங்கண்டு அங்கே வஞ்சிப்பொருளை மறித்துச்சொல்லிப் பின் மறிக்கப்பட்ட அம்முல்லைப் பொருளை அ௰-வது வரியிலே "இன்துயில் வதியுநன்காணாள் துயர் உழந்து" என்பதுடன் கொண்டுபோய் இணங்கக்கொளுத்தி ஆசிரியர் இச்செய்யுளைத் திறம்பட நடத்தும் * நுட்பவினையின் அருமைப்பாட்டை உய்த்துணர்ந்துகொள்க.

இன்னும் இவ்வகப்பொருள் முல்லை ஒழுக்கத்தினை இவ்வாறு நடாத்திக்கொண்டு சென்று அஅ-வது வரியில் "இன்பல் இமிழ் இசை ஓர்ப்பனள் கிடந்தோள்" என்பதுடன் முடிக்கின்ற இடத்தும் வினைவயிற் பிரிந்த தலைமகன் மீண்டு வந்தமை சொல்லவேண்டுதலின், அங்ஙனம் சொல்லப்படும் பொருளையுங் கற்போர் உற்றுநோக்கும்பொருட்டு 'இவ்வாறு கிடந்தோளுடைய அழகிய செவி நிறைய ஆரவாரித்தன' என்று மேல் ஓட்டப்படும் வாக்கியத்தின் பயனிலையான 'ஆரவாரித்தன' என்பதை முடிக்கும் பொருளான 'கிடந்தோளுடன்' சேர்த்தி அதன் எழுவாயான 'வினைவிளங்கு நெடுந்தேர் பூண்டமாவே' என்பதைக் கடையிலே நிறுத்தி அவ்விரண்டற்கும் இடையில் அவன் மீண்டு வந்தமை விளக்கக் கூறி அமைத்தார். முடிக்கின்ற இடத்திற் 'கிடந்தோள் செவி நிறைய ஆலின' என்று உரைப்பின், எவை ஆலின? என்னும் ஆராய்ச்சி தோன்றி மேல் வரும்பொருள் அறிய வேட்கை மிகும் ஆதலால் இவ்வாறு பயனிலையை முன்னும் எழுவா

---

* Artistic excellence.

யைப் பின்னுமாகப் பிறழக்கூறினர் என்க. இங்ஙனம் * பிறழக்கூறுதல் பொருள்வலிவுதோன்றுதற்பொருட்டும், கற்போர்க்கு மேலுமேலும் விழைவுள்ளம் தோற்றுவித்தற்பொருட்டுமாம் என்பது ஆங்கிலமொழியிற் பெயின் என்பவர் எழுதிய அரியதோர் அணியிலக்கண நூலினுங் கண்டுகொள்க. இந்நுணுக்கமெல்லாம் அறிந்து செய்யுள் இயற்றிய நப்பூதனார் பேரறிவும், பேராற்றலும் வியக்கற்பாலனவாம் என்க.

---

### *The extreme remoteness of the associations in முல்லைப்பாட்டு.*

---

இனி, மேற்கூறியவாறு முல்லைப்பொருள் ஒழுக்கம் உங-வது வரியிலே இடையறுந்து, நடுவே வஞ்சிப்பொருள் புகுத்தப்பட்டுத் திரும்பவும் அ௰-வது வரியிலே தன்பொருள் பொருந்தி அஅ-வது வரியில் முற்றுப்பெறுந்தறுவாயிற் பின்னும் முடிவுறாததுபோல் நீன்று இடையே வேறுபொருள் தழுவி ௱ங-வது வரியிலே பொருள் முதிர்ச்சிபெற்று முடிந்தது உற்றுணரற்பாலதாம் என்க. இங்ஙனம் ஒருபாட்டின் முதன்மைப்பொருள் இடையிடையே அறுந்து அகன்றுபோய்ப் பொருந்தி முடிதல் இம்முல்லைப்பாட்டிற்கும் இதனோடு சேர்ந்த மற்றை ஒன்பது பாட்டுக்களுக்கும் இயற்கையாகும். இவ்வாறு அகன்றுகிடக்கும் பொருளை அணுகப் பொருத்திக் காட்டுதலையே ஆசிரியர்-தொல்காப்பியனார் 'மாட்டு' என்பர். 'அகன்றுபொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும் இயன்று பொருள் முடியத் தந்தனர் உணர்த்தல், மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்'' என்பதுசூத்திரம்.

பெருங்காப்பியங்களும் இத்தகைய பெரும்பாட்டுக்களும் இயற்றுகின்ற பெரும்புலவர் இவ்வாறு அகன்று பொருள் முடியவைத்தல் உயர்ச்சியடைந்த எல்லாப் பாஷைகளினுங்

---

* Inverted order.

காணலாம். ஆங்கிலமொழியில் நல்லிசைப்புலவரான மில்டன் என்பவரும் இவ்வாறே தம்முடைய செய்யுட்களில் அகன்று பொருள் முடியவைத்தலும், மெக்காலே என்பவர் அதனைச் சிறந்து எடுத்துப் பாராட்டுதலுங் கண்டுகொள்க.

---

*Nachchinarkkiniar's commentary on* முல்லைப்பாட்டு

---

இனி, இதுவே 'மாட்டு' என்னுஞ் செய்யுளுறுப்பின் பயனுமென்பது நல்லறிவுடையார்க்கெல்லாம் இனிது விளங்கிக் கிடப்பவும், இதன் தாற்பரியம் இதுவாதல் அறியமாட்டாத நச்சினார்க்கினியர், செய்யுளில் இடையற்று ஒழுகும் பொருள் ஒழுக்கம் அறிந்து உரை எழுதாமல் ஓர் அடியில் ஒரு சொல்லையும் தொலைவிற்கிடக்கும் வேறோர் அடியில் வேறோர் சொல்லையும் தமக்குத் தோன்றிய வாறெல்லாம் எடுத்து இணைத்துத்தாமோர் உரை உரைக்கின்றார். நச்சினார்க்கினியர்க்கு முன்னிருந்த நக்கீரர், இளம்பூரணர், பேராசிரியர், சேனவரையர் முதலான உரையாசிரியன்மாராதல், அவர்க்குப் பின்னே யிருந்த பரிமேலழகர், அடியார்க்கு நல்லார், சிவஞானயோகிகள் முதலியோராதல் இவ்வாறு செய்யுட்களைக்கண்டவாறெல்லாம் அலைத்து உரை எழுதக் கண்டிலம். மேலும், நச்சினார்க்கினியர் இங்ஙனம் செய்யுட்களை நலிந்து பொருள்சொல்லுமுறையை ஆசிரியர்-சிவஞானயோகிகள், தாம்இயற்றிய தொல்காப்பியச் சூத்திரவிருத்தியில் ஆங்காங்கு மறுத்தருளியவாறுங் காண்க. அகன்று கிடக்குஞ் செய்யுட்பொருளை அணுகவைத்துப் பொருத்திச் சொல்வதே தொல்காப்பியனார் கூறிய 'மாட்டு' என்னும் உறுப்பாவதன்றி, மூலம்ஒருபக்கமும் உரை ஒரு பக்கமுமாக உரைப்பது அன்று என்பது கடைப்பிடிக்க. அப்படியன்று நச்சினார்க்கினியர் உரைக்கும் உரைசிறந்ததாகலின் அவர் அவ்வாறு செய்யுட்களை அலைத்துப் பொருள்சொல்லுதல் குற்றமாகாதெனின்;—

இவர் எவ்வளவுதான் சிறந்த உரை உரைப்பினும் அது செய்யுட் பொருளைக் கௌவிக்கொண்டு செல்லாமல் வேறுபடுமாயின் அது கொள்ளற்பாலதன்று என்று மறுக்க. செய்யுளுக்கு இசைய உரை எழுதல் வேண்டுமேயன்றி உரைக்கு ஏற்பச்செய்யுளை அலைத்து மாற்றவேண்டும் என்றல் 'முடிக்குத் தக்க தலைசெய்துகொள்ளல் வேண்டும்' என்பார் சொற்போல் நகையாடுவதற்கு ஏதுவாம் என்றொழிக. அப்படியன்று, செய்யுள் இயற்றிய புலவரே ஓர் ஒழுங்கில்லாமல் அவ்வாறு சொற்களையும் பொருள்களையும் சிதறவைத்துப் பாடினாராகலின் அக்கருத்தறிந்து நச்சினார்க்கினியர் அங்ஙனம் பொருள் கொண்டார் என்னுமோ எனின்;—உலக இயற்கையும் மனித இயற்கையும் அறிந்து வரிசை வரிசையாய் அரும்பொருள் தோன்றப்பாடும் நல்லிசைப்புலவர் அவ்வாறு ஒழுங்கு மின்றிப் பாடுதல் உலகில்எங்கும் காணப்படாமையானும், அது நல்லிசைப்புலமை யாகாமையானும் அங்ஙனஞ் சொல்லுதல் பெரியதோர் இழுக்காய் முடியும் என்று உணர்க. அப்படியாயின், மிக்க செந்தமிழ் நூற் புலமையும் நுணுங்கிய அறிவுமுடைய நச்சினார்க்கினியர் அவ்வாறு இணங்காவுரை எழுதியதுதான் என்னை எனின்;— வடமொழியில் இங்ஙனமே செய்யுளை அலைத்து மூலம் ஒரு பக்கமும் உரை ஒரு பக்கமுமாக இணங்காவுரை எழுதிய சங்கராசிரியர் காலத்திற்குச் சிலவருடம் பின்னே இருந்த நச்சினார்க்கினியர் வடமொழியில் அவர் உரைகளைப் பன்முறைபார்த்து அவை போல் தமிழிலும் எழுதப்புகுந்து தமிழ்ச்செய்யுள் வழக்கின் வரம்பு அழித்து விட்டாரென்றுணர்க. வேதாந்த சூத்திரத்திற்குச் சங்கராசிரியர் இயற்றிய பாடியவுரை அச்சூத்திரத்திற்குச் சிறிதும்ஏலாவுரை என்பதை ஆசிரியர் இராமாநுசர் பாடிய உரையானும், தீபா பண்டிதர் திருப்பிய ஆங்கில மொழிபெயர்ப்பானும் உணர்க. இனி ஆசிரியர்-நச்சினார்க்கினியர் உரை பொருந்தும் இடங்களின் எல்லாம் பிரமாணமே யாம் என்பதும், அரிய பெரிய பழந்

தமிழ் நூல்கள் விளங்குமாறு நல்லுரைவிரித்த நச்சினார்க்கினியர் இவ்வாறு ஒரோவிடங்களில் நலிந்துரை எழுதுவதுபற்றி இகழப்படுவார் அல்லரென்பதும் இங்குவற்புறுத்துகின்றோம். இனி இம்முல்லைப்பாட்டின் உரை நச்சினார்க்கினியரால் பெரிதும் அலைத்து எழுதப்பட்டதாகலின், அவர் உரையின்உதவி கொண்டே இப்பாட்டுக்குச் செவ்வையான வேறு ஓர் உரை பின்னே எழுதுகின்றாம்; அங்கு அதனைக்கண்டு கொள்க.

---

*Origin of the poem.*

---

இனித்திருமுருகாற்றுப்படைமுதலான பாட்டுக்கள் ஒன்பதும் உள்ளோன் ஒரு தலைவனையே குறிப்பிட்டுப் பாடவந்தமையால் இம்முல்லைப்பாட்டிற்குத் தலைவன் பெயர் எழுதப்படவில்லையாயினும், இதற்கும் உள்ளோன் ஒரு தலைவன் உண்டென்பது துணியப்படும். இம்முல்லைப்பாட்டை அடுத்திருக்கின்ற மதுரைக்காஞ்சியும், நெடுநல்வாடையும் தலையாலங்கானத்துச்செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு விளங்கலால் அவற்றை அடுத்திருக்கின்ற இதுவும் அவனையே பாட்டுடைத்தலைவனாகக் கொண்டிருக்க வேண்டும் என்பது ஊகிக்கப்படும். பாண்டியன் நெடுஞ்செழியன் தலையாலங்கானம் என்னும் இடத்திற் பகையரசரோடு போர்புரியும் பொருட்டுச் சென்ற போது அவன் மனைவி பிரிவின் துயரத்தை ஆற்றிக்கொண்டிருந்த அருமையினையும் அவன் சொன்னவண்ணம் மீண்டு வந்தமையும் நப்பூதனார் கண்டு பாடினாரென்பது புலப்படும். இவ்வாறே நெடுநல்வாடையினும் ஆசிரியர்-நக்கீரனார் நெடுஞ்செழியன் மனைவி அவனைப் பிரிந்துவருந்திய துன்பத்தினைவிரித்துச்,

" செம்முகச் செவிலியர் கைம்மிகக் குழீஇக்
குறியவும் நெடியவும் உரைபல பயிற்றி

இன்னே வருகுவர் இன்துணையோரென
முகத்தவை மொழியவும் ஒல்லாள் மிகக்கலுழ்ந்து
உரோகிணி நினைவனள் நோக்கிநெடிது உயிரா
மாயிதழ் ஏந்திய மலிந்துவீழ் அரிப்பனி
செவ்விரல் கடைக்கண்சேர்த்திச்சில தெறியாப்
புலம்பொடு வதியும் நலங்கிளர் அரிவை"

என்று கூறுதலோடு நப்பூதனார் கூறுவதையும் ஒப்பிட்டு உணர்க. நெடுஞ்செழியன் தமிழில் வல்லவன், சிறந்த கொடையாளி, அஞ்சாத போர்வீரன் என்பது புறநானூற்றில் அவன்பாடிய "நகுதக்கனரே" என்னுஞ் செய்யுளால் இனிது விளங்கலானும், தமிழ்ப்புலவர் பலரைச் சேர்த்துவைத்துத்தமிழை விருத்திசெய்துவந்தான் என்பது மதுரைக்காஞ்சி முதலியவற்றால் தெரிதலானும் இவனையும் இவன் கற்புடை மனைவியையுஞ் சிறப்பித்துப் புலவர் பலர் பாடினரென்பது துணிபு. அற்றேல், இதில் அவ்வரசன் பெயர் சொல்லப்படாமை என்னை எனின்;—அகப்பொருள் ஒழுக்கம்பயின்று வருகின்ற இதன்கண் அவ்வாறு ஒருதலைமகன் பெயர் சுட்டிச் சொல்லப் படமாட்டாதென முன்னரே காட்டினும்; இன்னும் நெடுநல் வாடையினும் தலைவன் பெயர் சொல்லப்படாமை காண்க.

இனி நண்பர் திருச்சிற்றம்பலம் பிள்ளை யவர்கள் தாம் எழுதிய முல்லைப்பாட்டுரையில் இச்செய்யுள் இல்லோன் தலைவனாக வைத்துக்கற்பிதமாக இயற்றப்பட்டதென்று உரைகூறினார். பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம் முதலியன எழுதப்பட்ட காலத்தில் இல்லது புனைந்து கூறும் கற்பித வழக்குத்தமிழில் இல்லை என்பதற்கு அக்காலத்தில் இயற்றப்பட்ட தமிழ் நூல்களே சான்றாகலின் அவர் கூறியது பொருந்தாது என்க. அப்படியாயின், இறையனார் களவியலுரையில் இல்லோன் தலைவனாக வரும் புனைந்துரை வழக்குச் சொல்லப்பட்டதென்னை எனின்; அங்ஙனம் அருகிவருவதுஞ் செய்யுள் வழக்கேயாம் பொய் யென்று களையப்படாது என்று விதிக்கும் பொருட்டுச்

சொல்லப்பட்டதே யல்லாமல், அக்காலத்து அங்ஙனம் நூல் செய்தல் உண்டென்பது அதனாற் பெறப்படுதல் இல்லை என்றொழிக.

---

*Scene of the action. vide line 86.*

---

இனிப் பாட்டுடைத்தலைவி யிருக்கும் இடம் உல்லாசமான முல்லை நிலக்காட்டில் மிகவும் அழகிதாகக்கட்டப்பட்ட ஏழ் அடுக்கு மாளிகையாம். பரிய மரங்கள் நெருங்க அடர்ந்து தண் நிழல் பயப்பவும், காட்டுக் கோழி பேட்டுடனுங் குஞ்சுடனும் முல்லைக்கொடிகள் பிணைந்து படர்ந்த பந்தரின் கீழ்ச் செல்லவும், கொன்றை மரங்கள் பொன் போற் பூத்து மணம் பரப்பவும், புள்ளினங்கள் செய்யும் ஓசையன்றி வேற்றொலி இல்லாமல் தனித்து மிகச்சிருங்காரமாய் விளங்கும் முல்லைக் காடு காம இன்பம் நுகரும் தலைமக்கட்குக் கழிபெருஞ்சுவை மிகுக்குஞ் சிறப்புடைமையால் முற்காலத்திற் பெருஞ்செல்வம் உடையோர் அங்கு மாளிகை அமைத்து அதில் வாழ்தல் வழக்கம்.

---

*vide lines 24—79.*

---

இனித் தலைமகளைப் பிரிந்து வினை முடிக்கப்போன தலைமகன் இருக்கும் இடம். பகைவர் நகரத்தைக் சூழ்ந்து அரணாயிருக்கும் முல்லைக்காட்டிற் பாடிவீடு என்க. முற்கால இயற்கைப்படி அரசர் தம் நகரத்திற்குக் காவலாக மதில், அகழி, பாலை நிலம் முதலியவற்றை அரணாக அமைத்தலேயன்றி அவற்றிற்கும் புறத்தே அடர்ந்த காடுகளையும் காவலரணாக வைப்பர். இவ்வாறு சமைக்கப்பட்ட பகைவர் காட்டிற் சென்று பாட்டுடைத்தலைவன் பாசறையில் இருக்கும் இருப்புச் சொல்லப்படுகின்றது.

*Time of the action; vide lines 5—6.*

---

இனித்தலைமகள் முல்லைநிலத்து மாளிகையில் இருக்குங் காலம் கார்காலத்தில் மாலைப்பொழுது என்க. கார்காலத்து மழை பொழிந்த முல்லைக்கானம் மரங்கொடிகளில் இலைகள் நீர் துளிப்பப், பறவைகள் ஆணும் பெண்ணுமாய்ப் போக நுகர்ந்து கூடுகளில் ஒருங்கிக்கிடப்ப, வானத்தில் கரியமேகங்கள் பரவி எங்கும் மப்பும் மந்தாரமுமாய் இருப்ப, அதனோடு மங்கல் மாலையுஞ் சேர்ந்து மழை காலத்தின் இயல்பை மிகுதிப்படுத்தத் தோன்றும் போது தனியளாய் இருக்கும் தலைவிக்கு ஆற்றாமை மிகுதலும், கணவன் கூறிய சொற்றவறாமல் அவள் அதனைப் பொறுத்து இருத்தலும், அங்ஙனம் இருப்போளுக்குக் கழிபேர் உவகைதோன்றத் தலைவன் மீண்டு வருதலும் போல்வன எல்லாம் இசைவாய் நடை பெறுதற்கு இக்காலம் பெரிதும் ஏற்புடைத்தாதல் காண்க.

---

*Vide line 50.*

---

இனித்தலைமகன் பாசறை வீட்டில் இருக்குங் காலம் வேனிற்காலத்து இறுதிநாளில் இடையாமம் என்க. வேனிற்காலத்துப் பகை வயிற்பிரிந்த தலைமகன் வெஞ்சுடர் வெப்பந்தீர நால்வகைப்படையும் நீரு நிழலும் பெறும் பொருட்டுக் கான் யாறு ஓடும் (*line 24*) காட்டில் தங்கிப் பகைவரோடு போர் இயற்றுங்காலமும் அதுவேயாம் என்க. இப்பாட்டில் அவன் பெரும்பாலும் போர் வினைமுடித்து அவ்வேனிற் காலத்தின் கடை நாள் இரவில் பாசறையில் இருக்கும் இருப்பும், மற்றை நாள் தொடங்கும் கார்காலத்தில் அவ்வினையினை முற்றும் முடித்து இரவுகழிந்து வருநாள் மாலைப்பொழுதில் மீண்டுந்தன் தலைவிபாற் சென்றமையுஞ் சொல்லப்படுகின்றன. இப்பொருள் அறியமாட்டாத

நச்சினார்க்கினியர் பொருளதிகார வுரையில் தலைவன் பாசறை இருப்புக்குங் கார்காலம் உரிய தென்று உரை கூறினர்; ஆசிரியர்-தொல்காப்பியனார் "கூதிர் வேனில் என்றிரு பாசறைக், காதலின் ஒன்றிக் கண்ணிய மரபினும்" என்பதனால் குளிர்காலத்துப் பாசறையும் வேனிற் காலத்துப் பாசறையு மென இரண்டே உடம்படுதலானும், தலைமகட்குக் கார்ப்பருவங் குறித்துவந்த தலைவன் அதுகண்ட வளவானே தான் எடுத்துக்கொண்ட வினைமுடித்து மீளுவான் என்பது அவர்க்கும் உடம்பாடாதலானும், இச்செய்யுள் செய்கின்ற நப்பூதனார்க்கும் அதுவே கருத்தாகலானும் பாசறை யிருப்பிற்குக் கார்காலங் கூறியது பொருந்தாதென மறுக்க. எடுத்த வினை முடியாதாயின் அது முடியுங்காறும் பாசறையில் இருப்பானாகலின், அவ்வாறு இருப்பதற்குப் பருவவரையறை இல்லை என்க. அப்போது எல்லாப்பருவமும் உரிய என்க.

---

*Analysis of the poem. From 1 to 6 lines, the description of the winter evening.*

---

கார்காலம் இப்போதுதான் தொடங்கிக் கரிய மேகம் மிகவும் நீர் பொழிந்தது. 'பெரும்பெயல்' என்பது கார்காலத் தொடக்கத்திற் பெய்யும் முதற்பெயல், இதனைத் தலைப்பெயல் என்றுஞ் சொல்லுவர். இங்ஙனம் முதற்பெயல் பொழிந்து விட்ட நாளின் மாலைக்காலம் முதலிற் சொல்லப்பட்டது. தலைவன் குறித்த கார்ப்பருவம் வந்தது என்பதனை அறிந்த தலைவி அவன் வருகையை நினைந்து மயங்கி இருத்தலும், அவ்வாறு இருப்போள் மயக்கந்தீர அவன் மீண்டுவந்தமையும் இப்பாட்டிற் சொல்லப்படுதலின் அவற்றிற்கு உபகாரப்படுகின்ற கார்ப்பருவ மாலைப்பொழுதை முதலிற் கூறினார் என்றறிக.

*The solitude of the heroine; her miserable condition; lines from 7 to 23.*

வேனிற்காலத்தொடக்கத்திலே தன் காதலன் பகைவயிற் பிரியபோகின்றான் சொன்னவண்ணங் கார்ப்பருவம் வந்தும் அவன் வந்திலன் என்பதை அறிந்த மனைவி பெரிதும் ஆற்றாளாகின்றாள். அதுகண்டு வயதுமுதிர்ந்த பெண்டிர் அவளை ஆற்றுவிக்கும்பொருட்டுத் தம் ஊர்ப்பக்கத்தேயுள்ள மாயோன் கோயிலிற்போய் நெல்லும் மணங்கமழும் முல்லைப் பூவுந் தூவி வணங்கி நற்சொற்கேட்டு நின்றார்; நிற்ப, அங்கு அருகாமையில் இருந்த மாட்டுக்கொட்டிலில் நின்ற ஓர் இடைப்பெண், புல்மேயப்போனதாய் இன்னும் வராமையாற் சுழன்று சுழன்று வருந்துகின்ற ஆன்கன்றுகளைப் பார்த்து 'நீங்கள் வருந்தாதீர்கள்' உங்கள் தாய்மார் கோவலரால் ஓட்டப்பட்டு இப்பொழுது வந்துவிடுவர்' என்று சொல்லியதை அம்முதுபெண்டிர் கேட்டுவந்து "அன்னாய்! நாங்கள் கேட்ட இந்நற்சொல்லானும், நின் காதலன் போகுந்தறுவாயில் அவன் படைவீரர் பாக்கத்திலே கேட்டுவந்த நற்சொல்லானும் நின் தலைவன் எடுத்துக்கொண்ட வினையைக் கடிசு முடித்து இப்போது வந்துவிடுவான் என்று துணிகின்றோம்; ஆதலால், மாயோய்! நீ வருந்தாதே" என்று அம்முதுபெண்டிர் பலகாலும் வற்புறுத்தி ஆற்றுவிக்கவும் தலைமகள் ஆற்றாமல் தன் கண்ணில் நீர் முத்துப்போல் இடையறுந்து துளிப்ப வருந்துகின்றாள்.

*From lines 24 to 78 the scene shifts to the encampment of the hero; lines, 24 to 28 the construction of the camp*

இனிவேனிற்காலத் தொடக்கத்திற் பகைமேற் சென்ற தலைவன், பகைவர் தம்நகரத்திற்குக் காவலாக அமைத்த அக

ன்ற பெரிய காட்டிற் பிடவஞ்செடிகளையும் பசிய தூறுகளையும் வெட்டி வேட்டுவர் அரண்களையும் அழித்து முட்களைமதிலாக வளைத்துக் கடலைப் போல் அகலமான பாடிவீடு அமைத்தமை சொல்லப்படுகின்றது.

---

*Then from 25 to 79 follows the minute description of the interior parts of the camp ; the physical and mental attitudes of the hero.*

---

இனி இங்ஙனம் அமைக்கப்பட்ட பாடி வீட்டினுள்ளே தழைகள் மேல் வேய்ந்த கூரைகள் ஒழுங்காக இருக்குந் தெருவில் நாற்சந்திகூடும்முற்றத்திலே கட்டப்பட்ட யானை கரும்போடு நெருக்கிக்கட்டிய நெற்கதிரினையும் அதிமதுரத் தழையினையும் உண்ணமல் அவற்றினால் நெற்றியைத் துடைத்துக் கொண்டும், கொம்பிலே தும்பிக்கையைத் தொங்கவிட்டுக்கொண்டும் நிற்றலால் அவ்யானைப்பாகர் அங்குசத்தாற் குத்தியும் வடசொற்களால் அதட்டியும் கவளம் ஊட்டுகின்றார்கள்.

இனி அப்பாடி வீட்டினுள் பல்வகைப் படைகளும் இருப்பதற்கு அமைக்கப்பட்ட அரண்களையும் அவ்வரண்களுக்கு இடையில் தலைமகனுக்கு ஒருதனிவீடு சமைக்கப்பட்டவாறுங் கூறுகின்றார். வலிய வில்லை நிலத்திற் சுற்றிலும் ஊன்றி அதில் அம்புப்புட்டிலைத் தொங்கவிட்டுப் பின் அவ்விற்களையெல்லாம் கயிற்றால் தொடுத்துக்கட்டி வளையச்செய்த இருக்கையின் நடுவில் மேற்கூரையினைத் தாங்குவதற்கு நீண்ட குந்தக் கோல்களை ஊன்றி அவற்றின் மேலே படங்குகளை நிரைத்துச் செய்த அரண்களுக்கு இடையிலே, தலைவனுக்கென்று பலநிறமுடைய மதில் திரையை வளைத்துச் செய்த வீட்டின் அமைப்புக்கூறினார். அதன்பின் அங்ஙனம் வகுக்கப்பட்ட தலைமகன் வீட்டில் அழகிய மங்கைப்பருவத் திளைய பெண்கள் கச்சிலேகட்டப்பட்ட திண்ணியவாளினை உடையராய் நெய்யைக்கக்குகின்ற திரிக் தழாயினாலே குறையுந்தோறும் திரியைக் கொளுத்தி எரித்தவண்ணமாய்த் தங்கையில் விளக்கேந்

திக் கொண்டு நிற்கின்றார்கள்; குதிரை முதலியன உறங்குத லின் அவற்றின் கழுத்திலே கட்டப்பட்ட மணியின் ஓசையும் அடங்கிப்போன நடுயாமத்தில் மெய்காப்பாளர் தூக்கமயக்கத் தால் அசைந்து அசைந்து காவலாகச் சுற்றித்திரிகின்றார்கள்; இங்ஙனம் நடுயாமம் ஆதலும், பொழுது அளந்தறிவோர் தலை வன் எதிரே வந்து நின்று வணங்கி வாழ்த்திக் கடாரத்து நீரி லேயிட்ட நாழிகை வட்டில் இவ்வளவு ஆயிற்றென்று அறிவி க்கின்றார்கள்; அதனைக் கேட்டவுடன் அரசன்எழுந்து, யவ னர்களாலே புலிச்சங்கிலிவிட்டு அழகாக நிருமிக்கப்பட்ட இல் லின் உள்ளே மங்கையர் விளக்கங்காட்டச் சென்று வலியகயி ற்றால் இடையிலே திரையை மறித்து வளையக்கட்டி முன்னொ ன்றும் பின்னொன்றுமாய் இரண்டாக வகுக்கப்பட்ட அறை யிற்போய்ப் படுக்கையில் அமர்ந்திருக்கின்றான்; அங்ஙனந்தலை வன் பள்ளிகொள்ளும் உள்ளறையின் முன் திரைக்குப் புறத் தே உள்ள வெளியறையிலே சட்டையிட்ட மிலேச்சரில் ஊமைகள் தலைவன்பள்ளியறையைச் சூழ்ந்து திரிகின்றார்கள்; அரசனோ நாளைக்குச் செய்யவேண்டும் போரினை மிகவிரும்பி அதனாற்படுக்கையில் உறக்கங் கொள்ளானாய் முன் நாட்களில் நடந்த போரிற் புண்பட்ட யானைகளை நினைந்தும், யானையை வெட்டியும் தமக்குவெற்றியினை உண்டாக்கியும் தவறி இற ந்து போன போர்வீரரை நினைந்தும், அம்பு அழுந்திய வருத் தத்தால் தினிகொள்ளாமல் காதைச்சாய்த்துக்கொண்டு கலங் கும் குதிரைகளை நினைந்தும் மிகுந்த இரக்கம் உடையோனாய் ஒருகையை அமளிமேல் வைத்து ஒரு கையினால் முடியைத் தாங்கி இவ்வாறு நீண்ட யோசனையுடன் இருக்கின்றான்; என்று இவை சொல்லப்பட்டன.

---

*Lines 72—80, the victory of the hero and his sound sleep in the camp.*

---

இனி இவ்வாறு முன்னாள் இரவு உறக்கமின்றிக் கவலை யோடிருந்த தலைமகன் பின்னாளில் பகைவரையெல்லாம் வெ

ற்றி கண்டு தன்வலியவிரலாலே நல்லவாகை மாலையினைச் சூடிக்கொண்டு நாளைமாலையில் தலைவியைக்காண்போம்' என்னும் மகிழ்ச்சியால் ஒருகவலையும் இன்றிப் பகையரசர் கேட்டு நடுங்குதற்குக் காரணமான வெற்றிமுரசு முழக்கும் தன் பாசறை வீட்டில் இனிது துயில் கொண்டிருக்கின்றான் என்பது சொல்லப்பட்டது.

---

*Lines 80 — 88. The scene again shifts to the villa where the heroine is lying down with a mingled feeling of sorrow and consolation.*

---

இனி இங்ஙனம் பாசறையில் இனிய உறக்கத்திலே கிடக்கின்ற தலைமகனைத் தன் பக்கத்திலே காணாத தலைமகள் அவனிடத்தே தன் நெஞ்சினைப் போக்கி மிகவருந்தும் வருத்தத்தால், முது பெண்டிர் நற்சொற்கேட்டு வந்து ஆற்றுவிக்குஞ் சொற்களையும் கேளாமல் வருந்துகின்றவள், "இங்ஙனம் ஆற்றாது வருந்தினால் கணவன் கூறிய சொல்லைத் தவறியதாய் முடியும்" என்று நெடுக நினைந்துபார்த்துத் தன்னைத் தேற்றிக்கொண்டும், கழன்றுவிழுகின்ற வளையைக் கழலாமற் செறித்தும், ஆற்றாமை உணர்வும் அதனைத் தேற்றுகின்ற உணர்வும் ஒன்று சேர்தலால் அறிவுமயங்கியும், அவ்வறிவு மயக்கத்தால் பெருமூச்செறிந்து நடுங்கியும், அந்த நடுக்கத்தால் செறித்த ஆபரணங்கள் சிறிது கழலப்பெற்றும் எழுடுக்கு மாளிகையில் விளக்கு எரியக் கூடல்வாயில் நீர் சொரியும்ஓசை காதில்விழ இம்மாலைக் காலத்திற் படுக்கையில் கிடக்கின்றாள்; என்பது சொல்லப்பட்டது.

---

*From lines 89 to the end, the return of the hero with a fine description of the country side in the winter.*

---

இனித்தலைமகன் பகைப்புலத்திற் கவர்ந்து கொண்ட பெரும் படையோடு வெற்றிக்கொடியை உயரத்தூக்கி ஊதுகொ,

ம்பும் சங்குமுழங்கக் காசாஞ்செடிகள் நீலமலர்களைப்பூக்கவும் கொன்றை மரங்கள் பொன்போல் மலரவும், காந்தள் அழகிய கைபோல் விரியவும், தோன்றிப்பூச் சிவப்பாக அலரவும்,வரக ங்கொல்லையில் இளமான்கள் தாவியோடவும், கார்காலத்து முற்றுங்காயினையுடைய வள்ளிக்காடு பின்போகவும் முல்லை நிலத்திலே மீண்டுவரும் போது அவன் இரதத்திற் கட்டிய குதிரை கனைக்கும்ஒலி ஆற்றிக்கொண்டு அங்கனங்கிடக்கும் தலைமகள் செவியிலே நிறைந்தன என்று கூறி முடித்தார்.

---

*Critical appreciation of the poem.*

---

கடலில் முகந்தநீரைப்பொழிந்து கொண்டே எழுந்தகரிய மேகத்திற்கு மாவலிவார்த்த நீர்ஒழுகுங்கையுடனே ஓங்கிவளர்ந்த கரியமாலை உவமை கூறியது மனோபாவகத்திற்கு இசைந்த உவமையாய்ப் பொருந்தி யிருக்கின்றது. நிலத்தில் ஊன்றிய வில்லிலே அம்பறுத்தூணியைத் தொங்கவிட்டிருப்பதற்குப் பார்ப்பனசன்னியாசி காவிக்கல்லில்தோய்த்த உடையைத் தன் திரிதண்டத்தில் தொங்கவிட்டிருப்பதை உவமை கூறியது பொருத்தமாயிருக்கின்றது; இதனால் இவ்வாசிரியர் துறவிகளிடத்துப் பழக்கமுடையர் என்பது குறிப்பால் அறியப்படும்.

மெய்காப்பாளர் பாடிவீட்டில் இடையாமத்திலே தூக்கமயக்கத்தோடும் அசைந்துதிரிதல், பூத்த புனலிக்கொடி வாடைக்காற்றில் அசைவதுபோல் இருக்கின்றது என்பதனாலும்,காசாமலர் கறுப்பாகவும், கொன்றை பொன்னிறமாகவும் தோன்றி சிவப்பாகவும் இருக்கும் என்பதனாலும், வரகங்கொல்லையில் மான்கள்தாவிக் குதிக்கின்றன. கார்காலத்திலே வள்ளிக்கிழங்கு முற்றிவிடும் என்பதனாலும் இவர் இயற்கைப் பொருள்களைக் கண்டறிவதினும், அவற்றைத்தாங் கண்டவாறே சொல்லுவதினும் திறமை உடையரென்பது இனிது விளங்கும்.

இன்னும் பெண்டிர் நற்சொற் கேட்கும் பொருட்டு ஊர்ப் பக்கத்து ஆலயத்திற்போய் நாழி நெல்லும் முல்லையுந்தூவி வணங்குதலும், குளிரால் தோளிற் கட்டிய கையுடன் நிற்கும் ஓரிடைப் பெண் ஆன் கன்றுகட்குத் தேறுதல் சொல்லுதலும், காட்டிலே பாடிவீடு செய்தலும், அப்பாடி வீட்டினுள் நாற் சந்தி கூடும் முற்றத்திலே யானைப்பாகர் யானையைக்குத்திக் கவளம் ஊட்டுதலும், வில்லினால் வளைவாக அமைக்கப்பட்ட கூடாரங்களுக்கு இடையிலே அரசனுக்கென்று வருணத்திரை யினால் வேறோர் வீடு செய்யப்பட்டிருத்தலும், அவ்வீட்டின் உள்ளே பெண்கள் பலர் கையில் விளக்கு ஏந்தி நிற்றலும், குதிரை முதலியவற்றின் கழுத்திற்கட்டிய மணியோசை நடு இரவில் அடங்கி விட்டதும், மெய் காப்பாளர் காவலாகத் திரி தலும், பொழுதறிவோர் கொப்பறை நீரிலிட்ட நாழிகை வட்டிலைப்பார்த்து வந்து அரசன் எதிரிலே இடையாமம் ஆயிற்று என்றலும், யவனர்களாற் புலிச்சங்கிலி விட்டு மிக அழகாக நிருமிக்கப்பட்ட பள்ளியறையுள் பெண்கள் விளக்குக்காட்டச் சென்று அரசன் பள்ளி கொண்டிருத்தலும், அப்போது ஊமை மிலேச்சர் பள்ளியறையைச் சுற்றிக் காவலாக இருத் தலும், படுக்கையில் உள்ள அரசன் மறு நாள் போரை விரும் பும் உள்ளத்தால் தூக்கம் பெறாமல் புண்பட்ட யானை குதிரை களையும், செஞ்சோற்றுக்கடன்கழித்து இறந்தொழிந்த அரிய போர்வீரரையும் நினைத்து வருந்தி ஒரு கையை மெத்தையின் மேலும் ஒரு கையைத் தலையின் கீழும்வைத்துப்படுத்து இருத் தலும், தலைமகள் எழுநிலைமாளிகையில் தன் கணவன் வரு கையை நினைந்து பிரிவின் துன்பத்தை ஆற்றிக்கொண்டு பதுமையின் கையிலுள்ள விளக்கானது எரிய, மாளிகையின் கூடல்வாயிலே வந்துவிழும் நீர்த்திரள் ஒலிப்ப மயில்போற் படுத்திருத்தலும், அப்போது தலைவன் தன் இரதத்தினை விரைவாய்ச் செலுத்திக்கொண்டு காட்டிலே வருதலும் நாம் நேரே காண்கின்றதுபோலவும், படம் எழுதி நம் கண்ணெ திரே காட்டினாற்போலவுஞ் சொல்லப்படுதல் காண்க.

இனி இவ்வாசிரியர் தாம் வருணிக்கும் பொருள்களின் உள்ளே நுழைந்து அவற்றை விரிவாக வருணிக்கின்றார் என்பது அறியற்பாற்று; இவ்வியற்கை பத்துப்பாட்டுக்கள் எழுதிய புலவர் எல்லாரிடத்துங் காணப்படுகின்றது. ஆயினும் இவர் ஒழிந்த மற்றைப்புலவர்கள் நம்மனோபாவக உணர்ச்சி சலிப்படையாமல் விரித்து வருணிக்க இசைந்த நன்பொருளை விரித்து வருணிக்கின்றார்கள்; இவரோ விரித்து வருணித்தாற் சுவையுண்டாகாத பொருளையும் அகலமாய் விரித்துச் சொல்லுகின்றார்; பாடிவீடு கட்டப்பட்ட தன்மையினை இவர் விரித்துச் சொல்லாமல் இருந்தால் இப்பாட்டு இன்னும் நன்றாய் இருக்கும். திருமுருகாற்றுப்படை முதலான மற்றை ஒன்பது பாட்டுக்களுக்கும் இம்முல்லைப்பாட்டு மிகவும் தாழ்ந்த தென்பது அவற்றை எல்லாம் ஒப்புநோக்கிப் படிப்பார்க்கெல்லாம் நன்குணரக்கிடக்கும்.

---

## *Metre and style of the poem.*

---

இனி, இச்செய்யுள் நேரிசை அகவற்பாவாற் செய்யப்பட்டது. ஒவ்வோர் அடியும் நான்கு சீர்களாக வகுக்கப்படும். ஒவ்வொரு சீரும் இரண்டசைக்குக் குறையாமலும் மூன்றசைக்கு மேற்படாமலும் வரும்; புலவன் தன் கருத்தை வருத்தமின்றி இலேசாக வெளியிடுவதற்கு இவ்வகவற்பாவினும் இசைவானது பிறிதில்லை. எதுகை இன்பமும் மோனையின்பமும் தோன்ற இயைந்துநிற்குஞ் சொற்கள் மற்றைப்பாஷைகளிற்போலாது தமிழில் மிகப்பெருகி யிருந்தாலும், அவ்வெதுகை நயமும் மோனை நயமும் நோக்காது பழைய தமிழ்ப் புலவர்கள் எவ்வாரும் அரும்பொருள் நிரம்பச் செய்யுட்கள் இயற்றுவாராயினர். பொருள் ஒழுங்குபடத் தங்கருத்துக்களைத் தொடுத்துச் செல்லும்போது ஆங்காங்கு இடர்ப்பாடின்றி எளிதாகத் தோன்றும் எதுகைமோனைகளையே அமைப்பர்; எதுகைமோனைகளுக்கு ஏற்பப் பொருள் பொருத்துவார்

அல்லர். பிற்காலத்தில் அகவற்பா பாடின புலவர் பெரும்பாலும் ஒவ்வோரடியிலும் முதற்சீரும் மூன்றாஞ்சீரும் எதுகைப்படத் தொடுத்தார்கள்; சிலர் இரண்டு இரண்டு அடிகள் முதற்சீர் எதுகை பொருந்தப்பாடினர்; அவர்செய்த அப்பாட்டுக்கள் எல்லாம் முதலிலிருந்து இறுதிவரையில் ஒரே ஓசையாய் நடந்து கேட்போர்க்கு வெறுப்பு உண்டாக்கும். மற்றுப் பண்டைக்காலத்துப் புலவரோ பொருள் இயைபுக்குப் பொருந்த ஓசை வேறுபடுத்திக்கொண்டே சென்று அகவற்பா இயற்றினர். இவ்வாசிரியர் நப்பூதனார் சில அடிகளில் முதற்சீரும் மூன்றாஞ்சீரும் எதுகை பொருத்தியும், வேறு சிலவற்றில் முதலும் நான்காவதும் எதுகை பொருந்தச்செய்தும், சில அடிகள் இரண்டிரண்டாய் முதற்சீரில் அவ்வாறு பொருந்த வைத்தும், சிலவற்றில் அதுதானுமின்றியும் பலவகையால் ஓசையின்பம் மாறி மாறி வரத்தொடுத்தார். இன்னும் ஆங்காங்கு அமைக்கப்படும் பொருளுக்கு இணங்க அடிகள் மெதுவாகவும், விரைவாகவும், இடையிடையே தெற்றுப்பட்டும் செல்கின்றன. பாடிவீடு இயற்றும் இடத்தில் ஓசை தெற்றுப்பட்டுச் செல்கின்றது; அரசன் பாசறையினுள் இருக்கும் நிலையைச் சொல்லும் இடத்து ஓசை மெதுவாக நடக்கின்றது; அவன் விரைந்து மீண்டு வருமிடத்து விரைந்துபோகின்றது. இவையெல்லாம் அறிவு ஒருங்கி உணர்க.

இனி இப்பாட்டினுள் இடைச் சொற்களையும் வேற்றுமையுருபுகளையும் நீக்கி எண்ணப்பட்ட சொற்கள் சிறிதேறக்குறைய ஐந்நூறு சொற்களாகும்; இவற்றுள் முன்வந்தசொற் பின்னும் வருமாயின் பின்வந்தது எண்ணப்படவில்லை. இவ்வைந்நூறு சொற்களுள் எட்டு வடசொற்கள்; யவனர், மிலேச்சர் இரண்டும் திசைச்சொற்கள்; ஆக இதனுட்காணப்பட்ட பிறபாஷைச் சொற்கள் பத்தேதாம். எனவே இப்பாட்டினுள் நூற்றுக்கு இரண்டு விழுக்காடு பிறசொற்கள் புகுந்தன என்பதறிக; மற்றைய எல்லாம் தனித்தமிழ்ச் சொற்கள்.

இனி, இப்பாட்டை மற்றை ஒன்பது பாட்டுக்களோடு ஒப் பிட்டுப் பார்க்கும்போது, இஃது அவ்வளவு உயர்ந்த செய் யுள் நடையுடையதாகக் காணப்படவில்லை, பொருநராற்றுப் படையில் வந்த

"துராஅய் துற்றிய துருவையம் புழுக்கின்
பராரை வேவை பருகெனத் தண்டிக்
காழிற் சுட்ட கோழூன் கொழுக்குறை" என்பவற் றைப்போல வாவது, மதுரைக்காஞ்சியில் வந்த

" மழை தொழி லுதவ மாதிரங் கொழுக்க
ஆழ்ந்த குழும்பில் திருமணி கிளர
எழுந்த கடற்றின் நன்பொன் கொழிப்ப" என்பவற் றைப்போல வாவது, இழுமென் ஓசையுடன் தித்திப்பாக எழு தப்பட்ட ஓரடியாவது இம்முல்லைப்பாட்டிற் காண்டல் அரிது; எங்கும் வல்லென்ற ஓசையுடன் கரடு முருடான சொல்லமை ப்பு உடையதாயிருக்கின்றது. சொல்லின் கொழுமையில்லா மையால் இப்பாட்டுக் கற்போர்க்கு ஒரோவொரு சமயங்களில் வெறுப்புந்தோற்றுவிக்கும். இப்பாட்டின் நடையினால் இதனை இயற்றிய நப்பூதனார் முருட்டுத்தன்மையும், அறிவாழமும், மிக்க மன அமைதியும் உடைய ரென்பது குறிப்பாக அறியப் படும். காட்டிடத்தையும், மழைகாலத்தையும், தலைவி தனிமை யினையும் பொருளாகக் கொண்டு இவர் இச்செய்யுள் இயற் றினமை யானும் அவையே இவர் குணமென்பது தெளியப் படும்.

---

## *Customs and Civilization of the ancient Tamilians as shown by the poem.*

---

இனி இப்பாட்டினால் பண்டைக்காலத் தமிழரின் வழக்க ஒழுக்கங்கள் சில அறியப்படுகின்றன. இனி நிகழுங் காரியம்

களை நிமித்தங் கேட்டு அறியலாம் என்று நம்பினர். பகைவர் மேற் சென்ற அரசர் காட்டிற் பாடிவீடு அமைப்பது வழக்கம். யானைப்பாகர் யானைகளை வடநாட்டுப் பாஷைச் சொற்களாற் பழக்கினர். அரசன் போற்மேற் செல்லும்போது பெண் களும் வாள் வரிந்த கச்சுடனே சென்று பாடி வீட்டில் அவனை உபசரிப்பர். கடாரத்து நீரில் இட்ட நாழிகை வட்டிலாற் பொழுது அறிந்துவந்தனர். கிரீஸ்முதலான தேசங்களி லுள்ள யவனர்என்னுஞ் சிற்பிகளை வரவழைத்துப் பல அரு மையான சிற்பவேலைகள் செய்து வந்தனர். இவ்வாறே சீவகசிந்தாமணியிலும் "தம் புலன்களால் யவனர் தாட் படுத்த பொறியே" என்றார். மிலேச்ச தேசத்திலுள்ள ஊமைகளை வரவழைத்து அரசர்கள் தம் பள்ளியறைக் குக் காவலாக இருத்தினர்; ஊமைகள் அல்லாரை அங்கு நியமிப்பின் அவர் முணுமுணுத்து வென்று பேசுதலால் அரச னுக்குத் துயில் கெடுமென்று ஊமைகளைத் தெரிந் தெடுத்தார்கள்போலும்! இன்னும் எழுநிலைமாளிகை முதலான உயர்ந்தகட்டிடங்களும், போக நுகர்தற்குரிய பலவகையான அரும் பண்டகளும், யானை, குதிரை, தேர், காலாள் முதலான நால்வகைப்படையும் பிறவளங்களும் அரசர் உடையராய் இருந்தா ரென்பதும் பிறவும் இனிது விளங்குகின்றன.

---

## விளக்க உரைக்குறிப்பு. *Explanatory notes.*

---

இம்முல்லைப் பாட்டிற்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர் இப்பாட்டுச்சென்ற வழியே உரை உரையாமல் தமக்கு வேண்டியவாறெல்லாஞ் சொற்களை அலைத்து எடுத்துத் தாமோர் உரை எழுதுகின்றார். இங்ஙனம் எடுத்து உரை எழுதுவன எல்லாம் 'மாட்டு' என்னும் இலக்கணமாம் என அதனியல்பைப் பிறழ உணர்ந்து வழுவினார் என்பது முன்னே காட்டினும். ஆண்டுக்கண்டு கொள்க. இனி, இங்கு அவர் உரையினை ஆங்காங்கு மறுத்துச் செய்யுட்பொருள் நெறிப்பட்டு ஒழுகும் நன்முறை கடைப்பிடித்து வேறோர் புத்துரை விளங்கும் வண்ணம் சில உரைக் குறிப்புக்கள் காட்டுகின்றாம்; காண்க. அடைமொழிகட்குப்பொருள் நச்சினார்க்கினியர் உரையிற் கண்டு கொள்க.

(க - சு வரிகள்) அகன்றகையிலே நீர் ஒழுக நிமிர்ந்த மாலைப்போல உலகத்தை வளைத்துக் கடல்நீரைப்பருகி உயர்ந்து மலைச்சிகரங்களில் தங்கி எழுந்த மேகம் முதற்பெயலைப் பொழிந்த மாலைக்காலம் என்க.

கரியநிறம் பற்றியும் உலகமெல்லாம் வளைந்த தொழில் பற்றியும் மேகத்திற்குத்திருமாலை உவமை கூறினார். அல்லது, மாவலிவார்த்த நீர் கைகளினின்று ஒழுகத் திருமால் நிமிர்ந்ததுபோல நீரைச் சொரிந்துகொண்டே உயர்ந்தமேகம் என்று உரைப்பினும் ஆம்.

(எ-கக.) ஊர்ப்பக்கத்தேபோய் நெல்லும் மலரும் தூவிப் பெரிது முதிர்ந்த மகளிர் நற்சொற் கேட்டு நிற்ப என்க.

(கஉ-கஎ) அங்ஙனம் அவர் நிற்கின்ற அளவில், பசிய கன்றின் வருத்தம் நோக்கிய ஓர் இடைப்பெண் கோவலரால் செலுத்தப்பட்டு உம்முடைய தாய்மார் இப்போது வருகுவர் என்று சொல்வோளுடைய நற்சொல்லைக் கேட்டனம் என்க

(கஅ) அதனாலும், பின் தலைவன் படைத்தலைவர் செல்லும் முன்னே பாக்கத்திலே கேட்டு வந்த நிமித்தச்சொற்களும் நன்றாயிருந்தன ஆதலாலும் என்க.

பெருமுது பெண்டிர் தலைமகளைத்தாங்கேட்டு வந்த நற்சொற்கூறி ஆற்றுவிக்கு மிடத்துத், தலைவன் செல்லுங்காலத்து நிகழ்ந்த நன்னிமித்தத்தினையும் உடன் எடுத்துக்காட்டி வற்புறுத்துகின்றார் என்பது இவ்வடியினால் இனிது பெறப்படுகின்றது. பகைவர் மண் கொள்ளச்செல்கின்ற வேந்தன் படைத்தலைவர் இங்ஙனம் ஒருபாக்கத்திலே விட்டிருந்து விரிச்சி கேட்பரென்பது ஆசிரியர் தொல்காப்பியனாராற் சொல்லப்பட்டது. இப்பொருள் இவ்வடியினால் இனிது பெறப்படுவதாகவும், இதனை உணராத நச்சினார்க்கினியர் கஅ-வது வரியிலுள்ள 'நல்லோர்' என்பதனை எ - வது வரியிலுள்ள 'போகி' என்னும் வினையோடு கூட்டி இடர்ப்பட்டும் இப்பொருளே கூறினார்; அங்ஙனம் இடர்ப்பட்டுக் கூறும்வழிப் பெருமுது பெண்டிர் விரிச்சி கேட்டபொருள் அவரால் விடப்பட்டது. தலைவன் குறித்துப்போன கார்ப்பருவ வரவினைக்கண்டு ஆற்றாளான தலைமகளை ஆற்றுவித்தற் பொருட்டுப் பெருமுது பெண்டிரும் விரிச்சி கேட்டுவந்து ஆற்றுவிக்கின்றார் என்பது நப்பூதனார் கருத்தாகலானும், மேலெடுத்துச் செல்லும் வேந்தன் படைத்தலைவர் மாத்திரமே விரிச்சி கேட்டற்கு உரியோர் ஏனையோர் உரியர் அல்லர் என்பது தொல்காப்பியனார்க்குக் கருத்தன்மையானும், யாங்கூறும் பொருளாற் பெருமுது பெண்டிர் விரிச்சி கேட்டலும் படைத்தலைவர் வாய்ப்புளும் இனிது பெறப்படுவதாக அவர் உரையால் படைத்தலைவர் நன்னிமித்தம் ஒன்றே வலிந்து கொள்ளப்படுதலானும் நச்சினார்க்கினியர் உரை போலியுரை என்க.

(கக-உக) 'பின் தலைவன், பகைவர் நாடெல்லாம் திறைப்பொருளாகக்கவர்ந்து கொண்டு இங்ஙனம் தான் எடுத்த காரியத்தினை இனிது முடித்து விரைவில் வருதல் உண்மையே

யாம், மாயோய் ! நீ நின்துயரத்தை நீக்குக' என்று அவர்வற் புறுத்தவும் தலைமகள் ஆற்றாளாய்க் குவளைப்பூவின் இதழை ஒத்தகண்ணிலே முத்துமுத்தாய் நீர் துளிப்ப வருந்தி என்க. மாயோள், வெளிறித் தளுக்காய்மிளிருங் கரிய நிறம் உடைய வள்; " மாயோள் முன்கை யாய்தொடி " என்னும் பொருந ராற்றுப்படை யடியுரையிலும் இப்பொருளே காண்க.

இனிஇங்கு இவ்வாறு உரைகூறுதலை நச்சினார்க்கினியர் மறுக்கின்றார். அவர்கூறிய மறுப்புவருமாறு:—முல்லை என்பது காதலனைப்பிரிந்த மனைவி அவன் வருந்துணையும் ஆற்றிஇருக் கும்ஒழுக்கமாம். நப்பூதனார் 'முல்லைப்பாட்டு' என்று இதற்குப் பெயர் அமைத்தமையால் இதன்கண் அவ்வொழுக்கமே கூறப் படுதல் வேண்டும் என்பது துணிபு. இதற்கு வேறாகத் தலைவி ஆற்றாமல் வருந்தினாள் என்றல் ' நெய்தல் ' என்னும் இரங் கல் ஒழுக்கமாம் ஆதலின், இவ்விரங்கல் ஒழுக்கம் போதரப் பொருள் உரைத்தல் நூலாசிரியர் கருத்தோடு பெரிதும் முர ணுதலின் இப்பாட்டுக்கு நேரே பொருள் கூறுதலாகாது' என்று சொல்லிப் பொற்சரிகை பின்னிய நற்பட்டாடையினை துண்டு துண்டாகக் கிழித்துச் சேர்த்துத்தைத்து அவலம் படுவார்போல அவர் செய்யுட்சொற்களை ஒரு முறையுமின்றித் துணித்துத்துணித்து வேண்டிய வாறு பின்னி உரை எழுது கின்றார். இனி அவர் நிகழ்த்திய ஆசங்கையினைப் பரிகரிப்பாம். வேனிற்காலத் தொடக்கத்தில் தலைவன் பிரியும் போது 'நான் கார்காலத்தொடக்கத்தில் மீண்டு வந்து உன்னுடன் இருப் பேன், என் ஆருயிர்ப்பாவாய்! நீ அது காறும் பொறுத்திருத் தல் வேண்டும்' என்று கற்பித்த வண்ணம் ஆற்றியிருந்த தலை மகள் அவன் குறித்த கார்ப்பருவம் வரக்கண்டும் வந்திலாமை யால் ஆற்றாளாயினள்; இஃதுலக இயற்கை. பெருமுது பெ ண்டிர் விரிச்சி கேட்டு வந்து வற்புறுப்பவும், ஆற்றாது வருந் துந்தலைவியின் 'நாம் இங்ஙனம் ஆற்றாமை வருந்துகின்றது கணவன் கற்பித்த சொல் தவறியதாகும்' என்று நெடுக நினை

ந்து பார்த்து 'அவர் வருந்துணையும் நாம் ஆற்றுதலே செயற் பாலது' என்று தன்னைத்தேற்றிக் கொண்டு கிடந்தாள் என்பது அஉ- வது வரி முதற் கொண்டு நன்கு கூறப்படுதலின் இப்பாட்டின் கண் 'முல்லை' ஒழுக்கமே விளக்க மாகச் சொல்லப்பட்ட வாறு அறிவுடையார்க் கெல்லாம் உணரக்கிடந்தது. அற்றன்று, முல்லை ஒழுக்கமே பயின்று வருகின்ற இப்பாட்டின்கட் "பூப்போல் உண்கண் புலம்பு முத்துறைப்ப" என்னும் இரங்கற்கு உரிய அழுகையினைக் கூறுதல் பொருந்தாதாம் பிறவெனின் ;—நன்றுகடாயினும். முன்னும் பின்னுமெல்லாம் முல்லை ஒழுக்கமே தொடர்புற்று வரும் இச்செய்யுளில் இடையே தோன்றிய அவ்விரங்கற்பொருள்பற்றி வரக்கடவதோர் இழுக்கு ஒன்றும் இல்லை ; முழுவதும் தொடர்ச்சியாய் அவ்விரக்கற்பொருள் வருமாயின் அன்றே அது குற்றமாம். அல்லதூஉம், குறிஞ்சி, பாலை, மருதம், முல்லை முதலிய ஒழுக்கங்கள் நடைபெறும்போதெல்லாம் இடையிடையே தலைவிமாட்டு ஆற்ருமைதோன்றும் என்பதும், அங்ஙனந் தோன்றும் அவ்வாற்ருமை எல்லாம் நெய்தல் ஒழுக்கம் ஆதல் இல்லை என்பதும் 'அகநானூறு' 'கலித்தொகை' முதலிய பண்டை நூல்களினெல்லாங் காணக்கிடத்தலின் இம்முல்லைப்பாட்டினிடையே வந்த அவ்வடிபற்றி ஈண்டைக்காவதோர் குற்றமில்லையென்று விடுக்க. ஆற்றுவார் யாருமின்றித் தனியளாயிருந்து கடலை நோக்கியும் கானலை நோக்கியும் தலைவி இரங்குதலும், பிறர் உள்வழி அவரோடு இரங்கிக் கூறுதலும் 'நெய்தல்' ஒழுக்கமாம் என்பது தொல்லாசிரியர் நூல்களிற் காண்க. ஆற்றுவார் உள்வழிஎல்லாம் நிகழும் ஆற்ருமை 'நெய்தல்' ஆவதில்லையாகலின், இப்பாட்டின் கண்ணும் கணவன் கூறிய சொல்லும் பெருமுது பெண்டிரும் ஆற்றுதற் காரணமாப் நிற்பத் தலைவிமாட்டுத்தோன்றிய ஆற்ருமை இடையே மொழியப்பட்டதாகலின் அது நெய்தற்றிணையாதல் ஒருசிறிதும் பொருந்தாமையின் நச்சினுர்க்கினியர் நிகழ்த்திய மறுப்புப் போலியா மென்று ஒழிக.

(உ௪-உ௮) மேல் எடுத்துச் சென்ற வேந்தன் படைத் தலைவர் பகைப்புலத்திற்கு அரணாய் அமைந்த முல்லைக்காட்டிலே பிடவஞ் செடிகளையும் பசியதூறுகளையும் வெட்டி, அங்குள்ள வேடரின் காவற்கோட்டைகளையும் அழித்து, முள்ளாலே மதில் வளைத்து அகலமாய்ச்சமைத்த பாசறை என்க.

ஈங்கு நண்பர் திருச்சிற்றம்பலம் பிள்ளையவர்கள் தாமெழுதிய 'முல்லைப்பாட்டு விளக்கவுரை' யிலே பகையரசன் பாடிவீட்டில் இருக்கும் இருப்பும், எடுத்துச்சென்ற வேந்தன் பாடிவீட்டில் இருக்கும் இருப்புமாக இரண்டுபாசறை வருணிப்பு இதன்கட் சொல்லப்பட்டது எனக்கொண்டு சில எழுதினர்கள். நச்சினார்க்கினியர் உரையிலேயாதல் நப்பூதனார் பாட்டிலேயாதல் அங்ஙனம் இருவகைப் பாசறை யிருப்புச் சொல்லப்பட்டது நாமறிந்தவளவிற் கண்டதில்லை.

(உ௧ - ௩௬) இப்பாசறையினுள்ளே தெருவில் நாற்சந்தி கூடும் முற்றத்தில் நின்ற மதயானை கரும்போடு கதிரும் நெருங்கக்கட்டிய அதிமதுரத்தழையினை உண்ணாமல் நெற்றியைத் துடைத்துக் கொம்பிற் கையைத் தொங்கவிட்டு நின்றதாகப், பாகர் தோட்டியினாற் குத்தி வடசொற்கூறிக் கவளம் ஊட்ட என்க.

(௩௬ - ௪௪) *See the analysis of the poem.* படிவம், தவவேடம்; "பல்புகழ் நிறுத்தபடிமையோனே" என்னும் பனம்பாரனார் பாயிரச் செய்யுளினும் இப்பொருள் காண்க. முக்கோல், திரிதண்டம்; இஃது ஐயர்க்குரியது; "உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்" என்னுங் கலித்தொகை யடியினுங் காண்க.

(௪ரு - ௪௯) மங்கையர் கையில் விளக்கேந்தி அதுகுறையுந்தோறுந் திரிக்குழாயினால் கொளுத்த என்க. இனி இவ்வாறன்றி மங்கையர் கையிலுள்ள விளக்கினைத் திரிக்குழா

யையுடைய சிற்றூட்கள் கொளுத்த என்றுரைப்பின் 'மங்கையர்' என்னுஞ் சொல் தழுவும் வினையின்றி நின்று வற்றுமாகலின் அப்பொருள் பொருந்தாதென்க.

(௩௰ - ௩௪) See the analysis. நிழற்றுதல், நுணுகுதல் அல்லது முன்னுள்ள ஓசை அடங்குதல்; " ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய், ஆவயின் நான்கும் நுணுக்கப்பொருள " என்பது தொல்காப்பியம்.

(௩௫ - ௩௮) See the analysis. 'மாக்கள் பொழுதளந்தறியும் பொய்யாக்காண்கையர்' என்று நச்சினார்க்கினியர் பிறழக்கூட்டுவர். பொழுதறியும் வினையாளர் என்று நேரே பொருள்படும் வாக்கியத்தினை அவ்வாறு பிறழக்கூட்டி அவ்வினையாளர்க்குப் பெருஞ் சிறப்புத் தோன்றப் பொருள்கூறுதலாற்போந்த பயன் என்னை என்று மறுக்க. குறுநீர், கொப்பறையிலுள்ள சிறிய நீர்; சாமிநாதையரவர்கள் 'குறுநீர்' என்பதற்கு நாழிகைவட்டில் என்று குறிப்பு எழுதினுர்கள்; அப்பொருள் நச்சினார்க்கினியருரையிலாதல் மற்றை நூல்களிலாதல் பெறப்படாமையால் அது பொருந்ாது. கன்னல் என்பது நாழிகை வட்டில்; "கன்னலுங் கிண்ணமும் நாழிகை வட்டில்" என்னும் பிங்கலந்தையாலும் உணர்க

(௩௯ - ௬௬) உடையினையும் மெய்ப்பையினையும் தோற்றத்தினையும் யாக்கையினையுமுடைய யவனர் புலிச்சங்கிலிவிட்டு நிருமித்த இல்லில் மங்கையர் விளக்கங்காட்டத்திரை வளைத்த பள்ளியறையுள் தலைவன் சென்று அணையில் வைகுதலும் ஊமை மிலேச்சர் புறஅறையிற் காவலிருப்ப என்க. மிலேச்சர்—துருக்கர்போலும் !

(௬௭ - ௭௯) See the analysis.

(௮௰ - ௱௩) See the analysis.

---

*The summing up.*

---

எழிலி பெரும்பெயல்பொழிந்த மாலைக்காலத்திலே பெருமுது பெண்டிர் "யாம் ஊர்மருங்கிற்போகி நெல்லொடுமுல்லைதூஉய்த்தொழுது நிற்ப, ஆய்மகள் கன்றின் அலமரல் நோக்கி நுந்தாயர் கோவலர் உய்த்தர இன்னே வருகுவர் என்போள் நன்மொழி கேட்டனம் அதனாலும், நல்லோர் வாய்ப்புள் நல்ல அதனாலும் திறையர் வினைமுடித்து நின் தலைவர் வருவது வாய்வது, மாயோய்! நீ நின் எவ்வங்களை" எனக் காட்டவுங் காட்டவுங் கலுழ்ந்து கண்முத்து உறைப்ப ஆற்றாது வருந்துந் தலைமகள், பாசறையில் இன்துயில் வதியுந் தலைவனைத் தன்மருங்கிற் காணாளாய் மேலும்வருந்திப் பின் தன் நெஞ்சம் அவனிடத்து ஆற்றுப்படுத்துத் தான் தனியளாய் இருக்கும் நிலைமையினை நீடு நினைந்து பார்த்து "நாம் நங்காதலன் சொல் வழி ஆற்றியிருத்தலே முறை" எனத் தேற்றியும், ஓடுவளை திருத்தியும், மையல் கொண்டும், உயிர்த்தும், நடுங்கி நெகிழ்ந்து, விளக்கிற் சுடர் அழல, மாடத்து முடங்கிறைச் சொரிதரும் அருவி ஓர்ப்பனள் கிடந்தோள் செவி| நிறைய ஆலின, பரிதுரக்குஞ் செலவினர் நெடுந்தேர் பூண்டமா என்று வினைமுடிக்க.

